# திருமந்திரம்







## இரண்டாம் தந்திரம்

2

மெய்யுரை ஆசிரியர் : தத்துவக்காட்சியர் வீர. உலகநாதன்

*திருமந்திரம் - தந்திரம் - 2*

திருமூலர்

# திருமந்திரம்

(இரண்டாம் பாகம்)

மெய்யுரை



உரையாசிரியர்:
தத்துவ காட்சியர். திரு.வீர.உலகநாதன்




ஆசிரியர்:
தத்துவ காட்சியர் திரு. வீர. உலகநாதன்
டிடி-4, வீட்டு வசதி வாரியம்,
திருமூலர் திரு மந்திராலயம்,
சாலை ரோடு, திருச்சி - 620 003,

# இரண்டாம் தந்திரம்

## தலைப்புகள்

70-4



*திருமூலர் அருளிச் செய்த திருமந்திர மாலையில்*

# இரண்டாவது தந்திரம்

## முன்னுரை

திருமந்திரம் அனுபவ ஞானத் திருநூல். அதாவது அறிந்து நுகர்ந்து அதாக பாவித்து தன்வயப்படுத்திய நூல். திருஞானசம்பந்தர், சுந்தரர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் நால்வரையும் கவர்ந்த நூல் நம் செந்தமிழ் சிறக்க எழுந்த நூல். நூல் ஒன்று பற்றினால்த் தான் கட்டிடம் அழகாயிருக்கும். நம் வாழ்க்கை சிறக்க திருமந்திர நூலே பயன் தரும். மக்களை நல்வழிப்படுத்துகின்ற யோக நூல். தமிழ் மக்களுக்காகவே எழுதப்பட்ட நூல். அனைவருமே நன்குணர்ந்து ஒழுக உயர்வளிக்கும் தனி நூல். இந்நூலை அன்புடன் ஓதி உணர்ந்து தெளிதல் அனைவரின் கடமை.

திருமந்திரம் (மனதின் திறம் மூவாயிரம்) அதை ஒன்பது தந்திரங்களாக (தன் அறிவின் திறத்தால்) அந்த ஒன்பதும் ஒன்றில் அடங்குவதே கடவுள் நிலை என்று தெளிய வைக்கும் திருமந்திரம் ஒரு தெய்வத் திருவருள் நூல். திருஅருள் சிந்தித்த எல்லாவற்றையும் தரும். மனிதன் நிலையானது என்று எண்ணியிருக்கின்ற உடம்பு, பொருள், இளமை ஆகிய அனைத்தும் எவ்வளவு பயன்படும் என்பதை அறிவித்து அவற்றின் நிலையாமையை எடுத்து விளக்கி, நிலையுடைய பொருள் எது என்று கூறி உபதேசிக்கத் தொடங்குகிறது.

அன்றியும் கடவுள் உருவமன்றி, அருவமாக இருக்கும் தன்மையையும், இயல்புகளையும் நம் கருத்தில் பதிய வைக்கின்றது. இம்மைப் பயன், மறுமைப் பயன் இன்னதென தெரிவிக்கின்றது. சிவலிங்கத் திருமேனியின உண்மை நிலையை குறிப்பிடுகின்றது.

ஒன்பது தந்திரங்களின் உரையும் ஒரே நூலாக அச்சடித்தால் அதன் விலையும் அதிகம், படிப்பதற்கும் கஷ்டமென தெரிந்து ஒவ்வொரு தந்திரமாக வெளியிட உத்தேசம். இயற்கனவே முதல்

# இரண்டாம் தந்திரம்

## தலைப்புகள்

70-4



## திருமூலர் அருளிச் செய்த திருமந்திர மாலையில்

# இரண்டாவது தந்திரம்

# முன்னுரை

திருமந்திரம் அனுபவ ஞானத் திருநூல். அதாவது அறிந்து நுகர்ந்து அதாக பாவித்து தன்வயப்படுத்திய நூல். திருஞானசம்பந்தர், சுந்தரர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் நால்வரையும் கவர்ந்த நூல் நம் செந்தமிழ் சிறக்க எழுந்த நூல். நூல் ஒன்று பற்றினால்த் தான் கட்டிடம் அழகாயிருக்கும். நம் வாழ்க்கை சிறக்க திருமந்திர நூலே பயன் தரும். மக்களை நல்வழிப்படுத்துகின்ற யோக நூல். தமிழ் மக்களுக்காகவே எழுதப்பட்ட நூல். அனைவருமே நன்குணர்ந்து ஒழுக உயர்வளிக்கும் தனி நூல். இந்நூலை அன்புடன் ஓதி உணர்ந்து தெளிதல் அனைவரின் கடமை.

திருமந்திரம் (மனதின் திறம் மூவாயிரம்) அதை ஒன்பது தந்திரங்களாக (தன் அறிவின் திறத்தால்) அந்த ஒன்பதும் ஒன்றில் அடங்குவதே கடவுள் நிலை என்று தெளிய வைக்கும் திருமந்திரம் ஒரு தெய்வத் திருவருள் நூல். திருஅருள் சிந்தித்த எல்லாவற்றையும் தரும். மனிதன் நிலையானது என்று எண்ணியிருக்கின்ற உடம்பு, பொருள், இளமை ஆகிய அனைத்தும் எவ்வளவு பயன்படும் என்பதை அறிவித்து அவற்றின் நிலையாமையை எடுத்து விளக்கி, நிலையுடைய பொருள் எது என்று கூறி உபதேசிக்கத் தொடங்குகிறது.

அன்றியும் கடவுள் உருவமன்றி, அருவமாக இருக்கும் தன்மையையும், இயல்புகளையும் நம் கருத்தில் பதிய வைக்கின்றது. இம்மைப் பயன், மறுமைப் பயன் இன்னதென தெரிவிக்கின்றது. சிவலிங்கத் திருமேனியின உண்மை நிலையை குறிப்பிடுகின்றது.

ஒன்பது தந்திரங்களின் உரையும் ஒரே நூலாக அச்சடித்தால் அதன் விலையும் அதிகம், படிப்பதற்கும் கஷ்டமென தெரிந்து ஒவ்வொரு தந்திரமாக வெளியிட உத்தேசம். இயற்கனவே முதல்

தந்திரம் வெளியாகிவிட்டது. இது இரண்டாவது தந்திரம். அன்பர்கள் உதவியால் வெளியிடுகிறேன்.

ஔவையார்

தேவர் குறளும், திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும், முனிமொழியும் - கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகம் என்று உணர்.

அதாவது எல்லா மதமும், எல்லா ஞானிகளும் சொன்ன கருத்து ஒன்றுதான். அன்பு, அருள், ஆற்றல். இதுதான் முப்பொருள் உண்மை.

இரண்டாவது தந்திரத்தில் சிவநிலையை அடைய நாம் செய்ய வேண்டிய 'அட்ட வீராட்டம், இலிங்க புராணம், பஞ்ச கிருத்தியம், கர்ப்பக்கிரியை, குரு நிந்தை, சிவ நிந்தை, அகத்தியம்' முதலிய *25* தலைப்புக்களில் *209* மந்திரங்கள் அடங்கியுள்ளன. நான் *1967*-ல் இருந்து தியானப் பயிற்சியில் ஈடுபட்டு அனுபவ உண்மைகளை எழுதி இருக்கிறேன். நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற கருத்தில் எழுத வந்தேன். தவறுகளை மறந்து எடுப்பதை ஏற்றுக் கொள்ள விழைகின்றேன்.

10-8-1998

இவ்வண்ணம்

வீர. உலகநாதன்
டிடி-4, வீட்டு வசதி வாரியம்,
சாலை ரோடு, திருச்சி - 620 003.

# 1. அகத்தியம் (காமிக ஆகமம்)

அகம் என்றால் உடம்பின் உள்பக்கம். அகத்தின் அழகு முகத்தில். முகம்தான் உடலுக்கு மூல ஆதாரம். அது எட்டு அறிவுப்பள்ளம் உள்ளது. ஒரே அறிவுப்புனல் (புகுந்த அனல்) நீராக மாறி எட்டுக் குழிகளில் நிரப்பப்பட்டு அதன் எச்சம் கீழ்நோக்கி போய் அங்கே பெரும் உடல்கள் ஆகிறது. அமிர்த மாகத் தோன்றி உப்புக் கடலாக மாறுகிறது. இது ஆசையால் ஏற்படும் நிலை. அதனால் காமம் எனப்படுகிறது. இதன் இயக்கத்தை காமிக இயல் என்பர். இந்த சக்தியை காமாட்சி என்பர். தலைவனை ஏகாம்பரம் என்பர். இடம் காஞ்சி எனப்படும்.

**நடுவு நில்லாது இவ்வுலகம் சரிந்து**
**கெடுகின்றது எம்பெருமான் என ஈசன்**
**நடுவுள அங்கி அகத்திய நீ போய்**
**முடுகிய வையத்து முன்இரு என்றானே. (323)**

பெரும் பூதம் ஐந்தினும் நடுவாக உள்ளது 'தீ'. "நம சி வய". அத்தீயின் நடுவுள் அதற்கு ஒளியும் சூடும் கொடுத்து உதவுபவன் சிவபெருமான். அவன் எரிகொண்ட ஈசன். உருவ வர்க்கங்களுக்கு காரணமான உருத்திரன். அதனால் விண்ணவர் அவனிடம் சென்று விண்ணப்பித்தனர். உலகம் தென்பால் உயர்ந்து வடபால் தாழ்ந்து நடுநிலை மாறி நிற்கின்றது. காத்தருள வேண்டுமென்று வேண்டி நின்றான். அவ்வமயம் சிவன் அகத்தியனை படிப்பினாலும் பண்பாட்டினாலும் உண்மை உயர்வை எந்நாளும் எய்தி நிற்கின்றது தென்னாடு, அதை ஆய்ந்து வடபாலுக்கு ஈந்து நிலை உண்டாக்கு வாயாக என்று அனுப்பினார்.

**அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்**
**அங்கி உதயம் செய் மேல் பால் அவனொடு**
**அங்கி உதயம் செய் வடபால் தவமுனி**
**எங்கும் வளங்கொள் இலங்கொளிதானே. (324)**

நாள்தோறும் சிவ பூஜைக்கு உறுப்பாகிய அகம் சாம்பிராணி புகை போடும் பாத்திரத்தில் நெருப்பு இட்டால் அதனால் வரும் புகை அறை முழுவதும் நிறைந்து சாம்பிராணித் தட்டை மறைத்துவிடும். அதுபோல் விளக்கில் இட்ட ஒளியை சூழ் ஒளி மறைத்துவிடும். அதுபோல் கம்பன் படைத்த பாத்திரம் இராமன். அவனை பூஜிக்கிறோம். கம்பனை மறந்துவிட்டோம். வள்ளுவன் படைத்த குறளுக்கு உள்ள மதிப்பு வள்ளுவனுக்கு இல்லை. பகவத்கீதை எழுதியவர் வியாசர். ஆனால் யாரைக் கேட்டாலும் கண்ணன் என்கிறோம். இதேபோல் அண்டம்

எல்லாம் படைத்த ஆண்டவனை மறந்து அவன் படைத்த பொருள்களை பாராட்டி ஏமாறுகிறோம். ஆனால் அவன் நினைவே உலகம் என்றாகும்போது இறைவனும் இயக்கமும் ஒன்றே என்று ஆகும். ஆகவே வடக்கு தெற்கு என்று பாகுபடுத்திப் பேசுவது அறியாமை ஆகும். நீர் மறைவில் இருப்பது (மங்கிய உதயம்) வடபால் பனிக் கட்டிமிக்கது. தெற்கேயும் அதேதான். மத்தியில் இருப்போர் சமநிலையில் உள்ளவர்.

## 2.பதிவலியில் வீரட்டம் எட்டு

### கருத்துறை

**அந்தகன் தன்போல் அசுரன்**
**வரத்தின் உலகத்து உயிர்களை எல்லாம்**
**வருத்தம் செய்தான் என்று வானவர் வேண்ட**
**குருத்துயர் சூலம் கைக்கொண்டு கொன்றானே. (325)**

கொன்றான் என்ற சொல்லை அழித்தல் என்ற பொருளி லேயே பார்த்துப் பார்த்து உண்மை புரியாமல் போயிற்று. கொல் என்பதே அழித்தல் அல்ல மாற்றுதலே. அறிவை மேலோங்கச் செய்வதே குருவை உயர்த்துதல். அது மூன்று ஒளியானதே சூலம். சூரியன், சந்திரன், அக்னி-முக்கண். மூன்றாவது கண்ணால் மன்மதனை எரித்தார். மன்மதன் கருப்பு. ஆனால் விஷ்ணு புதல்வன். அவனையும் எரிக்க இல்லை. உலகத்தார் கண்ணுக்கு எட்டாமல் அவன் மனைவி அறிய அருளினார். அதுபோல் அசுரர்கள் தாங்கள் பெற்ற வரத்தின் பயனாய் அதீத பலம் பெற்று உயிர்களை வதம் செய்தனர். அதனால் அதீத வீரத்தைப் போக்கி அவர்களை சாதுவாக மாற்றி அமைத்தல். இப்படியே ஒலி, ஒளி (நாதமும் விந்துவும்) நான்கு விதமான சக்திகளாக மாறி எட்டு சக்திகளானதே அட்ட (எட்டு) லட்சுமி. வீரன் தானம். அந்த கண் - அறியா மையால் சூழப்பட்ட இருளன். குருத்து, கூர்மை.

**கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்**
**தலையை தடிந்திட்டு தானங்கி இட்டு**
**நிலைஉலகுக்கு இவன் வேண்டும் என்று எண்ணி**
**தலையை அரிந்திட்டு சந்தி செய்தானே. (326)**

நான்முகன் மகனாகிய தக்கன் என்னும் வானவன் சிவனை புறக்கணித்து விஷ்ணுவை முன்னிலைப்படுத்தி வேள்வி செய்தான். முதன்மையை மறுத்த மறுத்தலாகிய குற்றம் செய்த பிரசாபதியாகிய தக்கனை சிவனடியார்கள் சினந்தனர். சிவன் தன் ஆற்றலால் அவன் தலையை துண்டித்து அதற்கு பதில்

ஆட்டுத் தலையை வைத்தான். அவன் தலையினை அவன் வளர்த்த தீக்கே இரை யாக்கினார். நம் புத்தியே நம்மைக் கெடுப்பதுபோல. மனம் என்ற நான்முகனிடம்பிறந்ததே புத்தி. ஆகவே இது இரண்டாவது செயல். முதலாவது விஷ்ணு புதல்வன் மன்மதனை எரித்து மாற்றியது. இரண்டாவது பிரம்மன் மகன் தக்கனை மாற்றியது.

**எங்கும் பரந்தும் இருநிலம் தாங்கியும்**
**தங்கும் படிந்தவன் தாள்உணர் தேவர்கள்**
**பொங்கும் சினத்துள் அயன் தலை மூன்அற**
**அங்கு அச்சுதனை உதிரம் கொண்டானே. (327)**

எங்கும் பரந்து விண்ணும் மண்ணும் நிறைந்து பாரபட்சம் இல்லாமல் சமநிலையில் இருப்பது ஒலி, ஒளி, சத்தி, சிவம், சதாசிவம். அதை மண்ணும் நீரும் தன்னுள் மறைத்து ருத்ரன் தலை போல எழுச்சி பெற்றது. அதை அடக்கி, ஒடுக்கி நெருப்பு மேல்நோக்கி சீற்றம் கொண்டு கிளம்புவதே எரிமலை, வெள்ளம், தன்னைவிட சக்திவாய்ந்த அக்னியை அடக்கி வைத்தால் அது குமுறிக்கொண்டு எழத்தான் செய்யும். அச்சுதன் - விஷ்ணு - மனோ தத்துவன். மனத்திலிருந்து வந்ததே உடல் (பிர்மா) மண்ணும் பெண். நீரும் பெண். இவை ஆண்பாலான காற்றையும், நெருப்பையும் அடக்க முயற்சிக்கலாமா? அவை நமக்கு உதவ வந்த உரனென்னும் தோட்டியான். நம்மை சுத்தம் செய்ய வந்தவர். அயன் தலையை வைரவக் கடவுள். (நான் எனும் அறியாமை) அச்சுதன் - மகன் - அயன். இஃது மூன்றாவது வீரச் செயல்.

**எங்கும் கலந்து என் உள்ளத்து எழுகின்ற**
**அங்கமுதல்வன் அருமறை ஓதி பால்**
**பொங்கும் சலன்தரன் போர் செய்ய நீர்மையின்**
**அங்கு விரல்குறித் தாழி செய்தானே. (328)**

அன்புச் சிவன் எல்லா இடங்களிலும் எல்லா உயிர்களிலும் எவ்வுயிர்க்கும் பின்னமற நின்ற பெருமான். என் உள்ளத்திலும் ஆறு அங்கங்களாகவும், ஆறு சமயங்களுமாகி அங்கங்களுக்கு முதல்வனாக உள்ளான். நான்கு மறைகளை ஓதி அருளிய ஒலி தத்துவமான நாதமும் ஆனவன். அவன் முதன்மையை உணராது சல மயமான சலந்தரன் போருக்கு வந்தனன். தன் எல்லையை மீறி மேலுயர்ந்தான். அவனை ஒரு பெருவிரலால் அழுத்தி குழி செய்து (சிவன் கருவி இன்றி கருத்தளவே யுத்தம் செய்ய வல்லவன்) அதையே ஆழி என்பது (சக்கரப் படை) அதனுள் அமிழ்த்து அழித்தான். அந்த ஆழியையே விஷ்ணுவுக்கு சக்கரப் படையாக அவன் தவத்தை மெச்சி

அருளினான். ஆழி என்பது மோதிரம் போன்றது. சூரியன் வடிவம்கூட அதுதான். அதுதான் ராமன் சூரிய வம்சம் என்பது. மோதிர விரலே சூரியவிரல். இது நாலாவது வீரச்செயல்.

**அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்**
**முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்**
**முப்புரமாவது மும்மல காரியம்**
**அப்புரம் எய்தமை யாரறிவரே. (329)**

ஐந்தாவது வீரச்செயல் முப்புரம் எரித்தது. ஆமா! சிவன் செய்த எட்டு வீரச்செயலால் நமக்கு என்ன? சிவனுடைய நிலையை நாம் அடைய விரும்பினால் நாமும் அத்தனையும் செய்ய வேண்டும். ஆயுதங்களால் அல்ல, உள்ளத்தாலேயே. ஆசைகளை அறுப்பதே மன்மதனை வெல்வது. முப்புரம் என்பது எங்கேயோ உள்ள ஊர் அல்ல. நம் அனுபவத்தில் உள்ள மூன்று மாறுபட்ட நிலைகள். நனவு (உடல்) கனவு (மனம்) உறக்கம் (சித் அறிவு) இது எதனால் ஏற்படுகிறது. ஆகார் அஜீரணம்-உடல் தேக்கம். எண்ணங்களின் அஜீரண நிலை மனம். இவை இரண்டின் இருள் அறிவை மறைப்பது உறக்கம். ஜீரணம் என்பது ஒன்றுமில்லாமல் ஆக்கும் சுத்தவெளி. இருள் நீங்கினாலே அறிவு என்றும் உள்ளது. அறிவு எழுப்பப் படுவதே எழுச்சி-தூண்டுதல். சிவனை துதி செய்தால் அவன் திருவருள் நோக்கால் சுட்டு எரித்து விடுவான். நோக்கரிய நோக்கு, நுணுக்கரிய நுண்ணுணர்வு. ஊழ்வினையை மாற்றும் உடல் ஆறு ஆதாரம், பத்து காற்று, எட்டு அறிவு (ஆறு பத்து எட்டு) மூன்றும் பாழாகும். இரும்பு என்பது ஆணவ மலம். வெள்ளி என்பது மாயாகாரியம். பொன் என்பது வினையின் காரியம். இவையே உண்மை. அன்பு அறிவு ஆற்றல் என்ற முப்பண்புகளுள் அன்பு பின்னின்று தூண்ட அறிவு (வாயில் பக்கம்) முன்னின்று காவலாகவும் ஆற்றல் இடப்பக்கம் காவலுக்கும் ஏற்பட்டது.

**முத்தீக் கொழுவி முழங்கெரி வேள்வியுள்**
**அத்தி உரி அரணாவது அறிகிலா**
**சத்தி கருதிய தாம் பல தேவரும்**
**அத்தீயின் உள்எழுந்து அன்று கொலையே. (330)**

ஐந்தாவது அடுத்து ஆறாவது வீரச்செயல். யானைத் தோலை உரித்தது. யானை என்பது ஆகாயத் தத்துவம். செயல்களில் நாலாவது செயல் மறைத்தல். அதாவது இந்த உலகத்தையே மறைத்து, உலகம் மறையும்போது உடலும் மறையும். அதுவே தூக்கநிலை. அதற்கப்பால் துரியநிலை. யானை ஐந்தையும் அடக்கி (பொறி வாயில் ஐந்தும் அவித்து) ஐம்புலக்கதவை அடைப்பதும் காட்டி, அறிவென்னும் ஞானத்

தீயை கொழுவி, முகத்தை ஒருபால் வைத்து (பொய்தீர் ஒழுக்கம்) நோக்க வல்லார் எவரோ அவர் ஆனந்தமயகோசம் அடைந்தவர். வானகம் ஏறியவர். அதாவது ஆறாவது அறிவை பெற்றவர். ஆறில் விரிந்தனன்.

**மூலத் துவாரத்து மூளும் ஒருவனை**
**மேலைத் துவாரத்து மேலுற நோக்கி முன்**
**காலுற்று காலனை காய்ந்து அங்கி யோகமாய்**
**ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே. (331)**

ஏழாவது நிலை உம்பர் சென்றான். பொருளது ஆவது உள் நின்றபோகம். காலத்தை வெல்வது. திருக்கடவூரில் எமனை இடது காலால் உதைத்தான். அதாவது அக்னியால் காற்றை இல்லாமல் ஆக்கினான். சுவாசத்தை ஸ்தம்பிக்கச் செய்தல். உயிர்தசையில் அடங்கல். மூலத்துவாரம் என்பது ஒளிக்கு, அங்கிக்கு, உருத்திரன் இருப்பிடம் கண்களே. நாசி வழி வாங்கும் உள்சுவாசம் நீர் அணுக்களை கண்களில் கொண்டு சேர்க்கிறது. இது நிமிடத்துக்கு 15 சுவாசம், 15 சொட்டு நீர். இது கண்களில் தேங்கி நிற்கும். காலையில் சூரிய ஒளிபட்டு அது கனலாகிறது. கனல் பட்டதும் சூடாகி ஆவியாகிறது. அது ஒரு நாளைக்கு 21,600 சுவாசம் ஆகிறது. நிமிடம் 15. ஒரு மணிக்கு 60 X 15, 900 X 24 மணி 21,600 இதில் வெளியே ரேசகமாக 7,200 வீண் போகிறது. உள்ளே தங்குவது 14,400. இந்த வீணே போவதும் சேர்ந்தால் எட்டு பனிரெண் டாகும். 8 X 4=32, 12 X 4 = 48 ஆகும். இத்துடன் உள்ளே வளைந்து வளைந்து போகும் காற்று நேரானால் நடு நாடி அக்னி கலை ஆகும். 16 அங்குலம் ஆக 16 X 4 = 64 ஆகும். அறுபத்திநாலில் மரணம் என்பர். மரணம் என்றால் உடல் சக்தி இழந்து மனோ சக்தி 6 X 6 =36 ஆகும். 64 + 36 =100. அதன்பின் இரண்டு குறைய 4 X 4 = 16 பிரக்ஞானம், அதன்பின் இரண்டு குறைய 2 X 2 = 4. 120 வருடம் மனித ஆயுள். கடைசியில் ஒலி, ஒளி நிலை. ஒலி ஒளியில் பிறந்து ஒலி ஒளியின் முடிவே காலக் கடவூர்.

**இருந்த மனத்தை இசைய இருத்திப்**
**பொருந்தி இலிங்க வழியது போக்கித்**
**திருந்திய காமன் செயலழிந்து அங்கண்**
**அருந்தவயோகம் கொறுக்கை அமர்ந்ததே. (332)**

உணர்ந்து அமர்ந்தனன் எட்டே. மால் மகனாகிய காமம் சிவபெருமான் அறம் போதிக்கும்போது காமன் அஸ்திரம் விட்டான். கரும்பு வில்லில் பூக்களை தொடுத்து அம்பு எய்தான். என்ன ஆனான் நெற்றிக் கண்ணால் எரிக்கப்பட்டான். அதுபோல் நாமும் ஆசைகளை நெற்றிக்கண்ணால் எரிக்கலாம்.

காம நினைவை அறிவுக் கருத்தால் அகற்ற வேண்டும். அவ்வுண்மையினை சிவபெருமான் மன்மதனை உருவிலனாக்கி விளக்கினார். கொற்கை திருவூர் என்பது கொன்ற கை-திரு-ஊர். அதாவது ஆசை-காமத்தை அடக்கி அதை ஓஜஸ்ஸாக மாற்றிய இடம் ஒளி மயமாக மாற்றிய இடம். கண்ணும் கனலிடை கட்டி எரித்து அமுதாக்கி உண்ணில் யோகிக்கு அறிவாகுமே.

மேலோதிய ஆண்மைச் செயல் எட்டும்:-

1) அந்தகன் உடலுறாது உயிர் மலத்துடன் ஒட்டியிருக்கும் பழமையான நினைவோசை. சஞ்சிதம் ஒழித்தல்.

2) தக்கன் - ஆணவச் செருக்கு அடக்கல்.

3) சலந்தரன் - கொடுவினை, தக்கன் ஆணவ மலத்தையும், சலந்தரன் - மாயையும்.

4) அயன், அரியான் எனதெனும் செருக்கை அழிப்பதாகும்.

5) முப்புரம் - மும்மலகாரியம் நனவு, கனவு, தூக்கம்.

6) அதீதியாகிய யானை - மயக்கம். கேள்வியால் சப்தத்தால் ஏற்படும் மருள்.

7) காலன் - வெகுளி. 8) காமன் - ஆசைகள்.

சிவனுடைய போர் அகப் போராட்டம். ஆகவே புறக் கண்களுக்கு புலப்படாத செயல்கள். இந்தப் போராட்டம் நம்மிடம் நடந்தவண்ணம் இருக்கிறது. அதுவே மஹாபாரதப் போர். இராமாயணம், சூரசம்ஹாரம். நமது உடல் போர்க்களம். இலிங்கம் என்றால் குறி. ஒருவன் ஆண் என்று அடையாளம் காண ஆண்குறி அல்லது மீசை. அது போல் பெண்ணுக்கு பெண்குறி அல்லது முலைகள். இது உருவத்தில் ஸ்தூலக் குறி. இங்கே நாம் ஆராய்வது சூட்சும அடையாளம். நெருப்பின் குறி. அது சமநிலையில் இருந்து மேல்எழுச்சி பெறுவதே நெருப்பு. அது எட்டு, பதினெட்டு, நூற்றெட்டு, ஆயிரத்தெட்டு என்பர். ஆனால் எல்லாவற்றிலும் எட்டு இருப்பதை கவனிக்கவும். அக்னியையே ரிஷி என்பது. ஏழு எழுச்சி, சப்த ரிஷி, முனிவர், தேவர், வித்யாதரர், காந்தர்வர், இராட்சசர், அரக்கர், பேய், கணம் என்ற பிரிவுகள் உண்டு. இது ஒரு முக்கூடல். மண் ஆவி, நீராவி, காற்றாவி, நெருப்பால் ஆவி, ஆகாய ஆவி, விண் ஆவி. இது ஆறு முப்பொருள் சேர்க்கை பதினெட்டு நிலை.

1. மண், நீர், நெருப்பு - நம்மிடம் உடல்
2. நீர், நெருப்பு, காற்று - நம்மிடம் மனம், உயிர்
3. நெருப்பு, காற்று, ஆகாயம் - நம்மிடம் கண் - ஒளி
4. வாயு, ஒலி, ஒளி - காதுகள்
5. ஒலி, ஒளி, வெளி - உச்சித்தலை
6. ஒளி, வெளி - உச்சிக்குமேல்

7. வெளி - ' (4 அங்குலம் - சூழ்ஒளி) நீலநிறமேனி ஆகவே எல்லாவற்றிலும் எல்லாம் கலந்தே இருக்கும். கூடுதல், குறைதலே ரூபம் நாமத்துக்கு காரணம். காரணம் இல்லை எனின் காரியம் இல்லை. காரணத்தை புரிந்து கொள்வதே அறிவு. காரணத்தை ஒழித்துவிட்டால் பிறவியே கிடையாது.

## 3. இலிங்க புராணம்

**அடி சேர்வன் என்ன எம்ஆதியை நோக்கி**
**முடிசேர் மலை மகனார் மகளாகி**
**திடமார்தவம் செய்து தேவர் அறிய**
**படியார அர்சித்துப் பத்தி செய்தாளே. (333)**

இந்தப் பாடல் பார்வதி, இமயவான் புதல்வியால் அவதாரம் செய்து சிவனை நோக்கித் தவம் செய்து உமை ஒரு பாகனு மான கதையைக் கூறுகிறார். நாம் நமக்கு உடல் இல்லையாயின் உலகம் இல்லை என்று புரிகிறது. நல்ல உறக்கத்தில் அது நிரூபணம் ஆகிறது. உடலும் இல்லை உலகமும் இல்லை. ஆனால் 'நான்' இருப்பது உணருகிறோம். அது எது? அதுவே நீ ஆனாய் என்பதுதான் உண்மை. அது பார்வை சக்தி. அது பூமியில் தோன்றும் சக்தி. மண்ணால் ஆன உடலிலும் உடல் அளவிற்கு ஏற்றார்ப்போல் தோன்றும் ஒளி வட்டமே பார்வதி. அவள் உடல் வழியாக சிரசின் உச்சிக்குப் போவதே முடிசேர் மலை. அதை நினைப்பதே தவம். தன்னையே அர்ப்பணிப்பதே அர்ச்சனை. நான் எனது என்று அற்ற இடமே திருவடி. உடலை மறந்த நிலையே உண்மை நிலை.

**திரிகின்ற முப்புரம் செற்ற பிரானை**
**அரியன் என்று எண்ணி அயர்வுற வேண்டா**
**புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்**
**பரிவொடு நின்று பரிசறி வானே. (334)**

முப்புரம் என்பது நம் அனுபவத்தில் உள்ள நனவு, கனவு, தூக்கம் என்ற மூன்று மாறுபட்ட நிலை. அந்த மூன்று நிலை உண்மை அல்ல. சூரியன், சந்திரன், நக்ஷத்திரத்தால் (சுடர்கள்) ஏற்படும் நிலை. மூன்றுக்கும் ஒளி கொடுக்கும் ஒரே ஜோதி அருட்பெருஞ்ஜோதி. அதுவே உண்மை நிலையாகும். பரம்பரை யாகும். அறிய முடியவில்லையே என்று அரற்ற வேண்டாம். புரிந்தவர்களுக்கு அவன் பொய்யன் அல்லன். அறியவேண்டும் என்ற ஆவலே உந்துதல்.

ஆழிவலம் கொண்ட அயன்மால் இருவரும்
ஊழிவலம் செய்ய, ஒண்சுடர் ஆதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற்கு அவ்வழி
வாழி பிரமற்கு வாள் கொடுத்தானே. (335)

ஒரு பள்ளம் என்பதே ஆழம். ஆழி அதைச் சுற்றி நீர். அதைச் சுற்றி மண் கரை. குழிக்குள் நீர் சுற்றிச் சுற்றி சுழன்று கொண்டே இருப்பதால் என்ன பயன். அதுதான் நம் கண் ஓட்டம். செக்கு மாடு மாதிரி நின்ற இடத்திலேயே சுழல்வது. விண்ணில் நின்று இயங்கும் விரிகதிர் செல்வனும், மண் நின்று இயங்கும் வாயுவும், பிராணனும் விண் நின்று இயங்கும் வாயுவும் அதுவும் ஆனது கண்ணில் நின்று இயங்கும் கருத்து அதுதானே. செக்கில் தயாராகும் எண்ணை பலருக்கும் பயன்படவேண்டும். அதற்கு வாணிபன் தேவை. அதற்காக ஏற்பட்டவர்களே விஷ்ணுவும், பிரம்மாவும். அச்சுதனுக்கு ஆகாய வட்டமும் (மோதிரம்) பிரமனுக்கு ஒளி வாள் கொடுக்கப்பட்டது.

தாங்கி இருபது தோளும் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்த 'அமரா' என்று அழைத்தபின்,
நீங்கா அருள்செய்தான் நின் மலன்தானே. (336)

கதை: இருபது தோளுடைய இலங்கை வேந்தன் இமய மலையையே அசைக்க முயன்றனன். அவனைத் கால் பெரு விரலால் அழுத்த, அழுத்தம் தாங்கமுடியாத இராவணன் 'அமரா' என்று கூவினான். அதன்பின் அவன் விடுவிக்கப்பட்டான் என்பது நாம் கேள்விப்படும் புராணம். புராணம் என்பதை நாம் எப்போதோ நடந்த கதை. இதற்கும் நமக்கும் சம்பந்தம் இல்லை என்று நினைப்பதால் அதன் பயன் புரிவதில்லை. அது இன்றும் என்றும் நடக்கும் நடைமுறை. இலங்கை என்பது நம் உடல். அதில் வேலை செய்யும் காற்று பத்துவிதம். தலையிலும் அதன் இருபது செயல்கள் கைகள். ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும் காற்று. அதன் கணக்கு அறிவார் இல்லை. அதன் கணக்கை அறிந்தவர் கூற்றை உதைக்கும் குறி அதுதான் என்கிறார் திருமூலர். உடலை அடைந்த நாம் எவ்வளவு பெருமை பேசுகிறோம். அதுதான் இராவணன் எனும் செருக்கு. அதை அடக்கவேண்டும். சீதை என்பது குளிர்ச்சி பொருந்திய நம் சிவன். அதை சிறைப்படுத்திய காற்று இராவணன். அதை சிறை மீட்டவன் இராமன் சூரிய அம்சம். அறிவு.

உறுவது அறிதண்டி ஒண்மணல் கூட்டி
அறுவகை ஆன் ஐந்தும் ஆட்டத் தன்தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழுவால் வெட்டி மாலை பெற்றானே. (337)

உறுவது - சிவனை நினைப்பதால் வருவது. அறுவகை - ஆறு வகையாக வரும் எண்ணங்களை அறுக்க வல்லவன் சிவன். செறுவகை - இந்த ஆறும் பகை - அதை அழிக்க.

(காமம், கோபம், லோபம், மதம், பொறாமை, டம்பம்) இது பெரிய புராணக் கதை. சண்டிகேசுவரன் மணலைக் கூட்டி சிவ உருவம் ஸ்தாபித்து அதன் மேல் பசுவை பால் கறக்கச் செய்து சிவபூஜை செய்து வந்தான். இதை அறிந்த அவன் தந்தை எச்சதத்தன் தன் காலால் அந்த மண் லிங்கத்தை உதைத்தான். அதைத் தாங்க இயலாத சண்டிகேசுவரன் அங்கே கிடந்த புல்லை வாளாகக் கருதி தந்தை காலை வெட்ட ,அவன் கால் வெட்டுண்டது. இதை வைத்தே வல்லவனுக்கு புல்லும் ஆயுதம் என்ற பழமொழி வந்தது. இது நம் எண்ணத்தாலேயே காரியம் சாதிக்கலாம் என்பது உண்மை. எண்ணியவர் எண்ணியதாங்கு எய்துவர் எண்ணியவர் திண்ணியராகப் பெறின். கல்லினுள் தேரைக்கும், கருப்பையில் உயிர்க்கும் புல்லுணர்வே தந்து போற்றும் தயாபாரன். புல்லாகி, பூண்டாகி, புழுவாகி, மரமாகி, பல் விருகமாகி, பாம்பாய், பறவையாய், கல்லாய், மனிதராய், பேயாய், கணங்களாய், வல்லசுரர் முனிவராய், தேவராய் என்பதில் முதல் நிலை புல்தான்.

**ஓடிவந்து எல்லாம் ஒருங்கிய தேவர்கள்**
**வாடி முகமும் வருத்தத்து தாம் சென்று**
**நாடி, "இறைவா நம" என்று கும்பிட**
**ஈடில் புகழோன் 'எழுக' என்றானே. (338)**

இங்கே ஆறு குணங்கள் நினைவுறுத்தப்பட்டன. 1) மெய்ப் பொருள் 2) ஆண்மை 3) புகழ் 4) திரு 5) ஞானம் 6) பற்று அறுதி (வைராக்கியம்) இவற்றை ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் எனவும் கூறுவர்.

இந்த ஆறையும் அம்மை, அன்பர், அயன்மால், இராவணன், சண்டேசுவரர், அமரர்கள் என உருவகக் கதையாக காட்டினார்.

வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு துன்பங்கள். மனிதர், தேவர், மால், அனைவருக்கும் நேர்ந்தன. நேருகின்றன. அப் பொழுது உயிருக்கு அஞ்சி வருந்தினர். காக்கும் முழு முதலாம் சிவனை நாடி ஓடினர். அவர்களை நாடி வந்த நஞ்சு முதல் அத்தனையையும் தான் உண்டு அவைகளை மாற்றி பயன்தரும் பொருள்களாக அருளினன். கற்பக விருக்ஷம், காமதேனு, மகாலட்சுமி, சரஸ்வதி போன்ற சக்திகளை கொடுத்து காத்தனர்.

***மெய்ப்பொருளாம் அம்மை, மீளிராண்மை மெய்யன்பர்,***
***வெய்ய புகழ் மால் அயன் மேவுதிரு ஐந்நான்கு***
***தோளான் சிவஞானம் சண்டேசர்***
***பற்றறுதி மாளாமல் காக்க விழைவான்.***

## 4. தக்கன் வேள்வி

தக்கன் என்றால் தெற்கு திசைக்கு அதிபன். அவன் எமன். அதாவது கால நிர்ணயம் செய்பவன். உயிரினங்களுக்கு ஆயுள் நிர்ணயிப்பவன். அவனுக்கு அதிகாரம் கொடுத்தவன் சிவன். காலனுக்கு காலன், அப்படி இருந்தும் அவன் சிவனையே அவமதித்து வேள்வி செய்தான். அதாவது நெருப்பில்லாத வேள்வி. எமன் என்பவனே இருளுக்கு அதிபன். ஏனெனில் காற்றின் நிறம் கருப்பு. அறியாமை. அதுவே சனி ஈசுவரன். உங்கள் ஜோதிடரிடம் கேட்டால் சனிதான் ஆயுள் காரகன் என்பர். அதாவது அறியாமைதான் நம் ஆயுள். அது நம் உள்ளே உள்ளம் கருத்து இருக்கிறது. துணி வெளுக்க வழியுண்டு. மனம் வெளுக்க வழி இல்லையே என்று பாடினார். நம் ஜாதகம் மேஷத்தில்தான் ஆரம்பம். மேஷம் என்பது ஆட்டுத்தலை. தட்க்ஷன் தலை அது. இனி பாடலுக்குப் போவோம்.

**தந்தை பிரான் வெகுண்டான் தக்கன் வேள்வியில்**
**வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்**
**முந்திய பூசை முடியார் முறை கெட்டு**
**சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே. (339)**

தக்கன் நான்முகன் புதல்வன் என்பது மனிதனுக்கு முகமே ஆரம்பநிலை. அதன்பின் அமைந்தது ஏனைய உருப்புக்கள். அதில் தெற்குப் பகுதி வயிறு. வயிற்றிலுள்ள ஜடாராக்கினியே தக்ஷன் என்பது. அவனுக்கு முன்னவர் சதா சிவம். தக்கன் பிழைபடச் செய்த புலை வேள்வியை (நாம் எல்லாம் அதைத் தான் செய்து கொண்டு இருக்கிறோம் - புலன் வழிச் செயல்) உன்னி மனதிற்கொள்ளும் பொல்லாங்குச் சூடாகிய வெகுளியை சிவன் கொண்டனன். அவ்வெகுளி முகத்தில் தோன்றினால் சினம் அது சொல்லாக வெளிப்பட்டால் சீற்றம்- செயலானால் செற்றம். மாறாதிருந்தால் வன்மம். சிவம் சினம் கண்டதும் தேவர்கள் நடுங்கினர். முந்திய பூசை முடியு முன்னே ஓட்டம் எடுத்தனர்

**சந்திசெயக் கண்டு எழுகின்ற அரிதானும்**
**எந்தை இவனல்ல யாமே உலகினில்**
**பந்தம் செய் பாசத்து வீழ்ந்து தவம் செய்ய**
**அந்தமிலானும் அருள் புரிந்தானே. (340)**

வேள்விக்கு தலைமை தாங்கிய விஷ்ணு வயனங்கள் மாறா வடுவாகிய தண்டனை பெற்று துன்புறும் விண்ணவரும் தலைமை பாடமைந்த அரியாகிய மால் மன்னிப்பு வேண்டுத லாகிய சந்தி செய்யலானான். ஆகவே தக்கன் வேள்வியில்

ஈடுபட்ட அனைத்துத் தேவர்களும் பூலோகத்தில் பிறந்து சூர பத்மனால் சிறை செய்யப்பட்டு அடிமைகளாகி, முருகனால் விடுவிக்கப்பட்டார்கள்.

**அப்பரிசே அயனார் பதி வேள்வியுள்**
**அப்பரிசே அங்கி அதி சயமாகிலும்**
**அப்பரிசே அது நீர்மையை உள்கலந்து**
**அப்பரிசே சிவன் ஆலிக்கின்றானே. (341)**

மேலோதியவாறு அயன் மகனும், தலைமை பாடு உடைய தக்கன் செய்த தீ வேள்வியுள் வியக்கத்தக்க விளங்கிய அங்கியும் வேண்டிக்கொள்ள சிவன் அவனை அழிக்காமல் தலையை மட்டும் மாற்றி ஆட்டுத் தலை வைத்தான்.

**அப்பரிசே அயன்மால் முதல் தேவர்கள்;**
**அப்பரிசே யாகிய காரணம்**
**அப்பரிசங்கி உளநாளும் உள்ளிட்டு**
**அப்பரி சாகி அலர்ந்திருந்தானே. (342)**

எல்லோருடைய வேண்டுகோளுக்கு இணங்க சிவன் முகமலர்ந்தேற்று அருள்புரிந்தனன்.

**அலர்ந்திருந்தான் என்று அமரர் துதிப்ப**
**குலம் தரும் கீழங்கி கோளுற நோக்கி**
**சிவந்த பரமீது சென்று கதுவ**
**உவந்த பெருவழி ஓடி வந்தானே. (343)**

எல்லாப் பொருளோடும் விரவி நின்றும் இயக்கும் சிவபெருமான் முகமலர்ச்சியுடன் இருந்தருளினை எனக்கொண்டு வானவர் தொழுதனர். தூய்மை முதலிய அனைத்து வகையாலும் ஏனைய வற்றையும் தூய்மைப்படுத்தும் தன்மையை உடைத்தது தீ. அது புன்மை வாய்ந்த தக்கன் சார்பாய் கீழ்மை அடைந்தது. வேள்வியை அழித்தது வீரபத்திரன். அக்குற்றம் நீங்கும் பொருட்டுச் சிவன் சினந்து தண்டித்தனன்.

பொது கருத்து: தக்ஷன் என்பது நம் போன்ற சிவனை விட்டு நீங்கிய சீவாத்மாக்கள் கதைதாம். நாம் கடவுளை அவமதிப்பது போல்தானே நடக்கிறோம். அவனுக்கு இருக்க இடமில்லாதவன்போல் ஒரு கோயிலைக் கட்டி அதில் சிலை யாக (உருவமில்லாத கடவுளை) வடித்து அவனுக்கு மனைவி, மக்கள், பகை, நட்பு கதைகள் எழுதுவதெல்லாம் கேலி செய்வதுபோல் அல்லாமல் என்னது? அதற்குரிய தண்டனையை அடைய வேண்டியது நியாயந்தானே.

உண்மை விளக்கம்: அருட்பெரும்ஜோதி - கோடி சூர்ய பிரகாசம் உள்ள ஒரு சிறு அணுவாக உருக்கொண்டு இந்த தூலஉடம்பில் புகுந்து 'நான்' என்னும் அபிமானத்துடன் வாழ்ந்து வருகிறது. இந்த ஜீவ அணுவே ஆத்மா எனப்படும். தானே

சரீரம் என்ற எண்ணத்தில் நரை, திரை, வியாதி, மூப்பு, மரணத்திற்குட்பட்டு துக்கப்படுகிறது.

அருட்பெருஞ்ஜோதியே தான் என்ற அனுபவம் ஏற்பட்டவுடனே சாகாத் தன்மையை அடைந்து அருட்பெருஞ்ஜோதியாக மாறிவிடுகிறது. இந்த மாறுதல் அடைவதற்கான வித்தையை முடிவானதாகவும் உடல், உள்ளம், வெளி நிலைகளின் உண்மை உணர பலவும் அடங்கியது சித்தம். இதன் சிறப்பு இயல்களை சித்தம் வெளிப்பட உதவும் கூறுகளையும் அதன் அற்புதங் களையும் அருளையும் விளக்க வந்ததே திருமந்திர நூல். இதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு படியுங்கள்.

**அரி பிரமன் தக்கன் அருக்கனுடனே**
**வரு மதி வாலை வன்னி நல் இந்திரன்**
**சிர முக நாசி சிறந்தகை தோள்தான்**
**அரன் அருள் இன்றி அழிந்த நல்லோரே. (344)**

மறைகள் நிந்தனை - நம் புறக்கண்களுக்கு புலப்படாததை இல்லை என்று சொல்வது அறியாமை. அதையே நாஸ்திகம் என்பது. அது நாசத்தையே கொடுக்கும். அதாவது சமநிலையை பாதிக்கும். சைவ நிந்தனை என்பது சம நிலையை பழிப்பது. உயர்வு தாழ்வு பேசுவது. இவையெல்லாம் சிவனை புறக் கணிப்பது ஆகும். அதனால் அவன் திருவருளை இழக்கிறோம். அருவம் இல்லாமல் உருவம் இல்லை. அப்படி ஐம்புல அறிவில் வாழ்பவர் எல்லாம் தக்கன்தான். தன்னிடம் வந்ததை தக்க வைத்து (சேமித்து) பெருமை பேசுவது. தறுகண் ஐம்புலன் களுக்கு ஏவல் செய்யுறா சதுர். அப்படி புலன்களுக்கு உதவுபவர் மால் (நீர் அணு), அயன் நீரின் கழிவு மண் துகள், அதன் கழிவு தக்கன் அதுதான் உடல். அதற்கு உதவும் ஞாயிறு, திங்கள், வாலை, தீ, இந்திரன் (வானவர்கோன்) முதலானவர்கள். சிவனிடத்துத் தோன்றிய சினம் நேரடியாகத் தாக்கினால் எல்லாம் அழிந்துவிடும். அதனால் உலக இயக்கம் பாதிக்கப்படும் என்று கருதி தன் அம்சமாக வீரபத்திரன் (வெவ்வுரு) மூலம் தண்டித்தார். வேள்வியில் கூடிய வானவர்களை தனித்தனியே தலை, முகம், மூக்கு, கை, தோள் முதலியவற்றை அறுத்து வேறு உருவமாக்கப்பட்டவர்களே மானிடர். ஆக, மனித உருவமே தண்டனைக்குரியது. அருளின்றி அவ்வானவர்கள் உருவானார்கள். நல்லோர் அல்லோர் ஆனார்கள். வாலை என்பது தக்கன் மனைவியின் பெயர். நம்முடைய மனமே - வெப்பக் காற்று. வாலை என்றால் வாலிபப் பெண். இளம்பெண். வாலை என்பது நமக்கு ஐந்து வயதினிலே அறியாப் பருவத்திலே பிஞ்சிலே கூடுகிறது. அதைப் பிரிய மனம் வருவதில்லை.

**செவி மந்திரம் சொல்லும் செய்தவத் தேவர்**
**அவி மந்திரத்தின் அடுக்களை கோலிச்**
**செவி மந்திரம் செய்து தாமுற நோக்கும்**
**குவி மந்திரம் கொல் கொடியது வாமே. (345)**

செவி மந்திரம் என்பது ஆகாயத்திலிருந்து வரும் வானொலி அது நுண்மையாகவே இருக்கும். அது நெருப்புடன் கலந்த மின்சக்தி (தேவர்) அவிமந்திரம் என்பது பூமியில் இருந்து வரும் தாவரங்களை அவித்து அதிலிருந்து வரும் ஆவி. அடு என்றால் கொலை செய்து (மாற்றி) களை எடுத்து அதைக் கோலி என்றால் சப்தமாக்கி, வானொலியோடு இதையும் சேர்த்து, இவை ஐம்புலன்களை விரியச் செய்வன. இது கொடிய செயல் என்கிறார். ஆகாமியம், சஞ்சிதம் என்பது இயல்பாகவே இருக்கும் எண்ணக்குவியல். அதில் கொஞ்சம் எடுத்து அறிவாக்கவே பிறந்துவந்தோம். அதுவே பிராரப்தம். மேல்க்கொண்டு இப்பிறவியில் எண்ணங்களைச் சேர்த்தால் பெரும் பாரந்தானே.

**நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்**
**பல்லார் அமரர், 'பரிந்து அருள் செய்க' என,**
**வில்லாற் புரத்தை விளங்கு எரிகோத்தவன்**
**பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே. (346)**

நவகுண்டம் என்பது ஒன்பது வாசல்களுடன் படைக்கப்பட்ட நம் உடல்தான். அதில் முகத்தில் ஏழு துவாரம் வரத்து, உடலில் இரண்டு கீழ்வாசல். அது (முகம்) சப்தலோகம். கீழ் வாசல், அதற்கு இடையூறாக முப்புரத்தார் (அசுரர்கள்) இருக்கின்றனர். அவர்களை அகற்றி காத்தருள வேண்டும் என்று சிவனை அமரர்கள் வேண்டி நின்றனர். சிவனும் தண்புன் சிரிப்பாலேயே முப்புரத்தையும் எரித்துவிட்டார். பொல்லாத பண்பனைத்தும் போக புரமெரித்தார். நல்லார்க்கு அருள் செய்யவே 'பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால் பேரா இடும்பை தரும்' என்பது வள்ளுவர் வாக்கு.

**தெளிந்தார் கலங்கினும் நீ கலங்காதே**
**அளிந்து ஆங்கு அடைவது எம் ஆதிப் பிரானை**
**விளிந்தானத் தக்கன் அவ்வேள்வியை வீயச்**
**அளிந்து ஆங்கு அருள் செய்த தூமொழியாளே. (347)**

அளிந்து - குழைந்து, சுளிந்து - கோபித்து, தூய்மொழியாள் - உள்இமை, ஊமை எழுத்து வானொலி.

உடலும் உள்ளமும், உணர்வு, உயிர் எல்லாவற்றிற்கும் பிறப்பிடம் வெட்ட வெளிதான். அது எப்போதும் எங்கேயும் நிலைபெற்றே இருக்கும். வருவார் போவாரைப் பற்றி அது கவலைப்படுவதில்லை. அதனால் எப்பொழுதும் அது சுத்த

வெளியே. எதைக்கண்டும் கலங்காதே. எல்லாம் காட்சி பொருள் தான். தோன்றித் தோன்றி மறைவன. ஆகையால் தோற்றத்தை பொருட்படுத்தாமல் சாக்ஷியாக இருந்து விளையாட்டாகப் பார். நடப்பதைக் கண்டு பயப்படாதே. வியப்படையாதே. கலங்காதே. நிகழ்ச்சிகளுக்கும் நமக்கும் சம்பந்தம் இல்லை என்று தெளிவாக இரு.

## 5. பிரளயம்

பிரளயம் என்ற சொல் - 'நான்' என்ற எண்ணம் எங்கே பிறந்ததோ அது அங்கேயே போய்ச் சேருவதே லயம் எனப் படும். இதையே 'எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்' என்று அவ்வையாரும், 'எண் எண்பர் ஏனை எழுத்து என்பர் கண் என்பர் வாழும் உயிர்க்கு' என்றார் வள்ளுவர். அடுத்து எழுத்தறி வித்தவன் இறைவனாகும் என்று புறப்பட்ட இடத்தையும் குறிகாட்டி உள்ளார். ஆகவே இறைவனாவதே பிரளயம். அதற்கு தொடர்பு காட்டுவதே (லிங்க்) லிங்கம் என்ற குறியீடு. மக்களுக்கு இறைத் தொடர்பு வேண்டும். அதை ஆற்றுப்படுத்திய வர்கள் திருமூலர் போல சித்தர்கள். அவர் செய்த தந்திரமே ஒன்பது தந்திரங்களும், ஏழ்நிலைத் தொடர்புகளையும் ஏற்படுத்த ஒரு சிறந்த சாதனமாகும். அந்த ஏழும் - முகத்தில் இதையே நம் வாழ்க்கையில் ஏழு பருவங்கள் என்பது. உருவம் குழந்தைப் பருவம், வாழ்வியல் தொடக்கம் அதன் பயணம் - இக்கை வளர பௌதிக வாழ்வு தொடருகிறது. ஆய்ந்து ஓய்ந்து சாய்நத பிறகு பிடி சாம்பல் ஆகும். இதையே சப்த பதி என்பது.

**"மத்திய மானதிலே வளர்ந்த லிங்கம்**
**சத்தியும் ஆவுடையுமான லிங்கம்**
**மகாமேரு உச்சியிலே வளர்ந்த லிங்கம்**
**சஞ்சார சமாதியிலே வளர்ந்த லிங்கம்**
**புத்தியாய் மனதொன்றாய் சூழ்ந்த லிங்கம்**
**புருவந் தன்னிலே முளைத்த லிங்கம்**
**எத்திசையும் புகழ்ந்திடவே வந்த லிங்கம்**
**ஏகபரமான தொரு லிங்கந்தானே."**

(காகாபுசுண்டர்)

லிங்கம் என்பது மைல்கல் போல் போய் சேர வேண்டிய இடத்துக்கு வழிகாட்டும் குறி.

**கருவரை மூடிக் கலந்து எழும் வெள்ளத்து**
**இருவரும் 'கோ' என்று இகல இறைவன்**
**ஒருவனும் நீருற ஓங் கொளியாகி**
**அருவரையாம் நின்று அருள் புரிந்தானே. (348)**

இருவர் என்பது அயன், மால், நம்மில் உடல், உயிர்.

பிரளய காலத்தில் கடல் பொங்கி பெரிய மலையையும் மூடி எங்கனும் ஒரே வெள்ளமானது. பிர்மாவும் விஷ்ணுவும் 'கோ' என்று அலறினர். அப்பொழுது நீரின்மேல் சிவன் பேரொளியாகத் தோன்றினான். அளத்தற்கரிய பெரிய மலை போல் நின்றனன். இதையே திருவண்ணாமலையில் கார்த்திகை தீபமாக காட்டு கிறார்கள். இதே காட்சியை நாம் நெற்றியில் காணலாம். இதைத் தான் திருவண்ணாமலையை நினைக்க முத்தி என்பது. நீர் திருவருள் அம்மையை குறிப்பதாகும். தீ பெரும் பொருள் சிவனைக் குறிப்பதாகும். அம்முறையில் சிவன் நீரை உடலாகக் கொண்டுள்ளார்.

**அலைகடல் ஊடறுத்து அண்டத்து வானோர்**
**தலைவன் எனும்பெயர் தான்தலை மேற்கொண்டு**
**உலகார் அழல்கண்டு உள் வீழாது ஓடி**
**அலை வாயில் வீழாமல் அஞ்சல் என்றானே. (349)**

உடலுக்கு ஆயுள்போல் உலகத்துக்கு ஊழி உண்டு. அப்போது அலைகடலின் நடுவாக ஊடறுந்து சென்று அண்ட முதல்வன் தானே என்பதனை உணர்த்தினன். உலகெங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் தழல் பிழம்பினைக் கண்டு ஓடும் ஏனையோரை அக்கடலின் நடுவுள் வீழ்ந்து மாளாமல் அஞ்சல் என்று அருள் செய்தான். உருவம் அழியும். ஜீவாத்மா (அருவம்) பரமாத்மாவுடன் ஐக்கியமாகும்.

**தண்கடல் விட்ட தமரரும் தேவரும்**
**எண்கடல் சூழ் எம்பிரான் என்று இறைஞ்சுவர்;**
**விண்கடல் செய்து அவர்மேல் எழுந்து அப்புறம்**
**கண்கடல் செய்யும் கருத்தறியாரே. (350)**

எண்கடல் - எண்ணங்களால் ஆன பெருங்கடல்
பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.
விண்கடல் - விண் அணுக்களால் ஆன கடல்

கண்கடல் - ஞானக்கடல். இச்சை செயல் அறிவு இயற்ற லால் இலய போக அதிகாரப் பொருள். எல்லாக் கடலும் மண்கடல், நீர்க்கடல், நெருப்புக்கடல், காற்றுக்கடல், ஆகாயக் கடல் நீலநிறக் கடல், எல்லாம் வெட்ட வெளியில் ஒடுங்கும்.

**சமைக்க வல்லானைச் சுயம்பு என்றேத்தி**
**அமைக்க வல்லார் இவ்வுலகத்து உளாரே**
**திகைத்த தெண்ணீரின் கடல்ஒலி ஓசை**
**மிகை கொள, அங்கி மிகாமை வைத்தானே. (351)**

எல்லாவற்றையும் எண்ணத்தாலேயே செய்ய வல்லவன் இறைவன். தானே தன்னருளாய் தோன்றி அருளும் தனி முதலாகிய சுயம்பு என்பர். சுயம்பு - தான் தோன்றி. வேறு

எதாலும் ஆக்கப்படாதது. அவனைத் தவத்தாலன்றி யார் அவனைத் தாங்க வல்லார். அனைவரும் கலக்கமெய்தி அஞ்சி ஓடினர். தென்திசைக் கடல் ஒலி செய்து வடதிசையை நோக்கி வந்தது. வடக்கில் சிவன் வடவைத் தீயை வைத்தருளினான். வடவைத் தீ பெரும் தீ: வடம்-பெரிய. நீரே அருளாகும் நீருள் ஒடுங்கும் தீச்சீரே சிவபெருமான். சமைக்க வல்லான் - ஆக்கி அளித்துத் துடைக்க வல்லான். அமைக்க வல்லார் - மனதில் இருத்தித் துதிக்கவல்லார்.

**பண்பழி செய்வழி பாடு சென்றப்புறம்**
**கண் பழியாத கமலத்து இருக்கின்ற**
**நண்பழியாளனை நாடிச் சென்று அச்சிரம்**
**விண் பழியாத விருத்தி கொண்டானே. (352)**

பண்பு அழிது செய் வழிபாடு - தகுதி அற்ற வணக்கம். உள் ஒன்று வைத்து புறம் ஒன்று பேசுபவர். வானவர்கள் தாம் வாழ வாழ்த்தும் பண்பினர். அது ஆசையின் நிமித்தம் வழிபடுதல். அது வேண்டும் இது வேண்டும் என்று கேட்டல். அன்பு வழி தானும் வாழ்ந்து பிறரும் வாழ நினைப்பது. தியாக வழிபாடு - பிறர் வாழ துதி செய்வது. அத்தகைய ஆசை வழிபாடு செய்து கண்ணுக்கு ஒப்பாக புகழ்ந்து கூறப்படும் செந்தாமரையில் இருக்கும் நான்முகன் (ஊனக்கண்) உடன் ஒத்த மாலுடன் நட்பு கொள்ளாது செருக்கால் நட்பைக் கெடுத்த வனுமாகின்றான். இருவரும் திரு ஆணையின்படி படைத்தல், காத்தல் தொழிலைச் செய்பவர்கள். அதனால் உடன் ஒத்த வராவர். அத்தகைய நான்முகன் தலை ஒன்று அறுக்கப்பட்டது. அதாவது தலைமை பதவி பறிக்கப்பட்டது. உடலை 'நான்' என்று கருதி வாழ்பவர் யாவரும் என்பதே பொருள். அதனாலேயே பிரமாவுக்கு என்று தனிக்கோவில் கிடையாது. முருகன் குட்டிச்சிறை செய்தான். 'ஓம்' என்ற பிரணவத்தின் பொருள் தெரியவில்லை. அவன் பிள்ளைகள் எல்லாமே அசுரர்களாகவே இருப்பர். நாரதர் ஒருவரே சாத்வீகர். கலகப்பிரியர்.

## 6. சக்கரப் பேறு

எல்லாம் ஒன்றுதான் என்பதுதான் உண்மை. ஆனால் அதை நாம் ஏற்றுக்கொண்டு வாழ்க்கையில் கடைப்பிடிக்காத வரை அதில் நம்பிக்கை இல்லை என்றுதானே பொருள். சொல்வது யாருக்கும் எளிது. பூரண அறிவு நிலையில்தான் ஏன் இப்படி நடக்கிறது என்ற காரணம் புரியும். அதிகாரம் ஒரே இடத்தில் குவியக் கூடாது என்பது இயற்கையின் நியதி. அதனால் பகிர்ந்து அளிக்கப்பட்டது. ஆனால் தொழிலை

வைத்து உயர்வு தாழ்வு பேசக்கூடாது. பிரம்மா பருப்பொருளுக்கு அதிபதி. மண், கல் கிடக்கும் அவ்வளவே. அதற்கு ஆற்றல் அழிப்பது சரஸ்வதி. சரம் என்றால் நீருடன் சேர்ந்த காற்று. வெண்தாமரையில் வீற்றிருப்பாள். பருப்பொருளுடன் சேர்ந்து நெகிழ வைப்பவள். அதை அடுத்து சுழலும் சக்தி நீர் சக்தி. ஓடும் சக்தியும் உண்டு. அதுதான் சக்கரம் போன்ற ஆயுதம். விஷ்ணுவுக்கு கொடுக்கப்பட்டது. மேலே இருந்து கீழே வரலாம். ஆனால் கீழே இருந்து மேலே போகும் ஆற்றல் கிடையாது. அப்படி விரும்பினால் நெருப்பை பிடித்து ஆவி ஆகவேண்டும். மண்ணில் தேங்கி சுழலலாம். அவ்வளவே நீர் ஆற்றல். மழை நீர், அருவி நீர், ஆற்று நீர், கடல் நீர், ஊற்று நீர், ஏரி, குளம், கிணறு, அணைக்கட்டு எல்லாம் தேக்கு நீர். இவருக்கு சத்திலட்சுமி. அவள் நெருப்பு நிறம் (லட்சுமி) அது நின்ற கோலம். மேலே எழப் பண்ணும் சக்தி. லட்சுமியை மணம் செய்தபின் மேலே ஆவியாக ஏறும் சக்தியாகும். ஆகவே மண்ணும் நீரும் பௌதீகப்படி பெண் சக்திகளே. நெருப்பும் காற்றும் ஆண் சக்திகள்.

**மால் போதகன் என்னும் வண்மைக்கு இங்கு ஆங்காரம்**
**கால் போதம் கையினோடு அந்தரச் சக்கர**
**மேல் போக வெள்ளிமலை அமராபதி**
**பார் போகம் ஏழும் படைத்துடையானே. (353)**

மாயை என்றால் அது ஒரு வேடம் போன்றதே. உண்மையை மறைத்து வேறு ஒன்றாகத் தோன்றுவது. அந்த மாயை விண்ஞானம் சுத்த மாயை என்றும், மண் ஞானம் அசுத்த மாயை ஏனப்படும். அப்படிப் பார்க்க சிவன், விஷ்ணு, ருத்திரன், பிரம்மா எல்லாமே மாயைதான் என்ற அடிப்படை உண்மையை அறிந்துகொண்டு இந்தக் கதைகள் எல்லாம் பொய் தான். பொழுதுபோக்கு என்ற பார்வையில் பார்க்கவேண்டும். ஆனால் பொய்யிலும் மெய் உண்டு. அதைத் தேர்ந்து பிரித்துப் பார்க்கவேண்டும். அதுவே பகுத்தறிவு. பார்த்த பொருளை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் அதில் அறிவை மட்டும் ஏற்றுக் கொள்ளப் பழகுவதே கல்வி. மூலப் பகுதியில் உறையும் கடந்த அரியும் அயனும் வேறாவர். முக்குணம் கடந்த மால் (உடல், உயிர், புத்தி, மனம், வாக்கு, காயம்) கடந்த சுத்த நீர் முக்குணம் நிறைந்த மாலுக்கு முன்னோர். அதாவது அருவ நிலை. பெயர் ஒற்றுமையால் உலகோர் மயங்குவதன்றி அந்த போலி மாலே செருக்குறுகின்றான். அச்செருக்கு தலைக்கு மேலேறி விண்ணிலே பரந்து மூடிவிட்டது. அதனால் திருமால் சக்கரத்தை இழந்தான். அதைத் திரும்பப் பெற சிவன் துணைச் செய்தான். சக்கரத்தை திரும்பப் பெற்றதால் சக்கரப் பேறு

என்பர். அதற்கு நன்றிக் கடனாக இராமன் சிவனை வணங்கு வதே இராமேஸ்வரம். போதகன்-குரு. ஏழு குருக்களில் ஒருவர் திருமால். ஏனையோர் சதாசிவன், அநந்தன், நீலகண்டன், அம்பிகை, கந்தன், அயன்.

**சக்கரம் பெற்று நல் தாமோதரன் தானும்**
**சக்கரம் தன்னை தரிக்க ஒண்ணாமையால்**
**மிக்கரன் தன்னை விழுப்புடன் அர்ச்சிக்க**
**தக்க நற்சத்யைத்தான் கூறு செய்ததே. (354)**

தாமோதரன்-தாமதமான குணமுள்ளவன். கடைக்குணம் நிரம்பிய வயிற்றினன். அவனுக்கு சக்கரம் கிடைத்ததும் அதன் வேகத்தை அவனால் தாங்க இயலாமல் சிவனை வேண்டி நின்றான். தகுதி இல்லாதவனுக்கு பதவி கொடுப்பது போல. கருவிகள் பெற்றால் மட்டும் போதாதே அதைச் செயல் படுத்தவும் தெரியவேண்டுமே. தவில் லட்சுமி என்ற சக்தியை தன்னிடமிருந்து பகிர்ந்து கொடுத்து உதவினன் சிவன். தக்க நற்சக்தி - தனக்குரிய வலிமையை.

**கூறதுவாகக் குறித்து நற் சக்கரம்**
**கூறது செய்து கொடுத்தனன் மாலுக்கு**
**கூறது செய்து கொடுத்தன் சக்திக்குக்**
**கூறது செய்து தரித்தனன் கோலமே. (355)**

(கோலம் - படை எனக் கூறுதலும் ஒன்றே.

கூறு - அம்சம் - தன்னில் ஒரு பங்கு. சிவபெருமான் தனது ஆற்றலின் ஒரு பகுதியை சக்கரத்தை படைத்தனன். படைப்பு என்பது பல பொருள்களின் சேர்க்கை. இங்கே வட்டமான ஆகாயம். அதைத் திருமாலுக்கு அளித்தான். அதுதான் திருமாலுக்கு நீலநிறம். கிருஷ்ணபக்ஷம்.

**தக்கன்தன் வேள்வி தகர்த்தநல் வீரர்பாற்**
**தக்கன்தன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்**
**சக்கரம் தன்னைச் சசிமுடிமேல் விட**
**அக்கி உமிழ்ந்தது வாய் உக்கரத்திலே. (356)**

செருக்குற்ற தக்கன் (நம்மைப் போல் உருவத்தை நான் என்று கருதி செருக்குற்று வாழ்பவர்) செய்த புலை வேள்வியை- உடலால் செய்யும் செயல்கள். இதனால் இயற்கையின் இயக்கம் தடைப்படுகிறது. உருவம் அருவத்துக்கு எதிர்தானே. அதனால் இதை அழிக்க வந்ததே வைரஸ் என்னும் நுண்ணிய கிருமி. அதையே வீரபத்திரன் என்பது. அவன் சிவனின் அம்சம் என்பதை காட்ட தலையில் சந்திரன் பிறை சூடி இருந்தான். நமக்கு நம் மனம் ஆட்சி செய்வது முகத்திலிருந்துதான். அதையும் பொருட்படுத்தாமல் திருமால் தன் நீர் சக்கரத்தை சுழற்றி வீசினார். அது செயலற்று போயிற்று. சசிமுடி-சந்திரனை

சூடியவர். 'உ' ங்காரம் - உட்கொலி. அச்சுறுத்தும் ஓசை 'உம்' என்பது உ + அ + ம் = ஓம். தாமத குணம் பொருளால் ஆனவன் - தாமோதரன்.

## 7. எலும்பும் கபாலமும்

நம் உடலில் எலும்பும் கபாலமுமே முக்கியமான பகுதி. அது இல்லையாயின் நிற்க, ஓட, ஆட முடியாது. அவை சிவனின் பகுதி என்பர். நம்மில் ஆண்களுக்கு எலும்பு பலம் அதிகம்.

**எலும்பும் கபாலமும் ஏந்தி எழுந்த**
**வலம்பன் மணிமுடி வானவ ராதி**
**எலும்பும் கபாலமும் ஏந்திலனாகில்**
**எலும்பும் கபாலமும் இற்று மண்ணாமே. (357)**

வலம் - ராதி = ஒளி பொருந்திய அழகிய முடியை உடைய சிவன்.

அவன் எல்லா உயிர்களிலும் உட்புகுந்து எலும்பும் கபால மாகவும் நின்று செயல் புரிகின்றான். அவனே வானவர் முதல்வன். ஆதி முதல்வன். அயன், அரி இருவர் தம் எலும் பினையும் மண்டை ஓட்டினையும் (திருவோடு) ஏந்தினவன் சிவனே. அவ்வாறு ஏந்துதலினால் தான் அழிவில் முழுமுதல் என்பதைக் காட்டுவதாகும். ஏனைய மண்ணவர், விண்ணவர் அனைவர்க்கும் பிறந்து பிறந்து இறக்கும் உயிரினங்கள் என்பதையே காட்டும் சிவன் எலும்பினையும், கபாலத்தையும் எந்தாது ஒழிந்தால், உருவங்கள் இற்று மண்ணொடு மண்ணாய் போய் ஒழியும். எலும்பே முதலும் முடிவுமல்ல. அதை ஏந்தும் சக்தி மஜ்ஜையும், மூளையும் இதன் குறிப்பு காரண மாயை என்றும் அழிவினை எய்தாது சிவன் பொறுப்பில் நிற்கும் என்பதே.

## 8. அடிமுடி தேடல்

இந்தப் படைப்புக்கும், அழிவிற்கும் காரணம் அறிய முயற்சித் தலே அடிமுடி தேடல். இது ஒவ்வொரு மனிதனுக்கும் தோன்ற வேண்டும். நான் ஏன் பிறந்தேன்? என்ற கேள்வியே அது. இந்தக் கேள்விக்கு பதில் கிடைத்துவிட்டால் பிறப்பு இறப்பி லிருந்து விடுதலை பெறலாம். ஆனால் அதைத் தேடாமல் என்னவோ பிறந்துவிட்டோம். வாழ்ந்து தொலைப்போம் என்று தொலையக் கூடாது. நான் என்ற எழுவாயையே தொலைத்து நிற்கிறோம். அதை தொலைத்தது மட்டுமல்லாமல் வேறு எதை எதையோ நான் என்று கருதி வாழ்வது இன்னும் பரிதாபத்துக்குரியது. எப்பொழுது நம்மைத் தேட ஆரம்பித்து

விட்டோமோ கண்டிப்பாய் விமோசனம் உண்டு. விசாரணையே இல்லாததால்தான் கெடுகிறோம்.

**பிரமனும் மாலும் பிரானே நான் என்னப்**
**பிரமன் மால் தங்கள் தம் பேதமையாலே**
**பரமன் அனலாய் பரந்து முன்நிற்க**
**அரனைத் தேடி அரற்று கின்றாரே. (358)**

பிரமனின் கூறுதான் நம் உடல். மாலின் கூறு நம் உயிர். இவை இரண்டும் உடம்பொடு உடம்பு தழுவி நிற்பதோடு உடல் 'நான்' என்கிறது. உயிர் 'நான்' என்கிறது. இவை இரண்டும் தான் நிற்கக் காரணமான எட்டுத்திக்கும் பதினாறு கோணமும் முட்டித் திரியும் ஜோதிதான் காரணம் என்பதை அறியாமல் 'நான்' நான் என்று பேசலாமா? இந்த உண்மையை அறிந்தால்தானே அடங்கும். அறியாதவரை பேதையர்தாம். அப்பேதமைச் செருக்கால் மாலும் (நீர்) நான்முகனும் (உடல்) தனித்தனியே தான்தான் முதல்பொருள் என்று வழக்கிட்டனர். அவர்கள் பேதமைக்கு இரங்கிய சிவன் அவர்கள் நடுவில் மண்ணுக்குக் கீழும் விண்ணுக்கு மேலும் இடை ஈடின்றி ஒன்றாய் முளைத்துத் தோன்றித் திகழும் பேரொளிப் பிழம்பாய் நின்றனன். நிற்க மாலும் அயனும் முறையே அடியும் முடியும் தேடிக் கண்டு கொண்டனர். நாமும் அப்படியே ஜோதி சொரூபத்தை ஏற்போமாக.

**அடிமுடி காண்பர் அயன் மால் இருவர்**
**படி கண்டிலர் மீண்டும் பார்மிசைக் கூடி**
**அடிகண்டிலேன் என்று அச்சுதன் சொல்ல**
**முடிகண்டேன் என்று அயன் பொய் மொழிந்தானே.(359)**

அடிமுடி தேடும் படலத்தில் விஷ்ணு பன்றி ரூபமெடுத்து கீழ்நோக்கியும் (நீர் பள்ளம் நோக்கியே செல்லும்) பிரம்மன் அன்னப்பறவையாக மாறி (நாம் சாப்பிடும் ஆகாரம் ஆவியாக மாற மேல் நோக்கியே செல்லும்) அவை மறுபடியும் மத்தியில் சந்தித்து விஷ்ணு காணமுடியவில்லை என்று சொல்ல பிரம்மன் முடி கண்டுவிட்டதாக பொய் சொன்னான். படிகண்டிலர் - கருதிய வண்ணம் பார்த்திலர் மயக்கும் மாயை-மூலப்பகுதி. இயக்கும் மாலை அசுத்த மாயை.

**ஆம் ஏற் உலகுஉற நின்ற எம் அண்ணலும்**
**தாம் ஏழ் உலகில் தழல் பிழம்பாய் நிற்கும்**
**வான் ஏழு உலகுறும் மாமணி கண்டனை**
**நானே அறிந்தேன் அவன் ஆண்மையாலே. (360)**

ஏழு உலகமும் ஒன்றாய்ப் பொருந்துமாறுதழற் பிழம்பாய் நின்றவன் எம் அண்ணல். இயற்கையில் உலகமே உருவமாக நிற்பவன் வானத்தில் கூறப்படும் ஒலி, ஒளி ஏழு வகை உலகங்

களிலும் திருநீலகண்டனாய் நிற்பவனும் அவனே. அவன் திரு வடிக்கண் வைத்த காதலினால் அடியேனையும் ஆட்கொண் டான். அல்லும் பகலும் அருவத் தொடர்பால் அவன் திருவடி உணர்ந்தேன். ஏழு உலகம் என்பது நாவல், இரவி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரம் என்பன. எல்லாம் தீவுகள்.

**ஊனாய் உயிராய், உணர்வு அங்கியாய் முன்னம்**
**சேணாய் வானோங்கி திருவுரு வாய் அண்டத்து**
**தாணுவும், ஞாயிறும் தண் மதியும் கடந்து**
**தான்முழு அண்டமுமாகி நின்றானே. (361)**

கலப்பால் மாயா காரிய உடம்பாய், அவ்வுடம்பகத்து வினைக்கு ஈடாக உறையும் உயிராய், அவ்வுயிரின் உணர்வாய் நீங்காமல் நின்று காத்தருள்பவன் சிவன். அண்டங்களைத் தாங்கும் கல் தூணும் அவனே. எல்லாம் கடந்து நிற்பவனும் அவனே. உதவும் தன்மையால் அனைத்து அண்டங்களையும் ஆளுபவனும் அவனே.

**நின்றான் நிலமுழுதும் அண்டத்துள் நீளியன்**
**அன்றே அவன் வடிவு அஞ்சின ஆய்ந்தது;**
**சென்றார் இருவர் திருமுடி மேற்செல**
**நன்றாம் கழலடி நாட வொண்ணாதே. (362)**

இறைவனின் பொருள் சேர் புகழை புண்ணிய மெய்யடியார் புகழும் போக நீண்டு கொண்டே செய்வதுபோலத் தோன்றும். அண்டமுற நீண்ட இயல்பு. அயனும் அரியும் அஞ்சினர். காண முடியாது நாணி மீண்டனர். நம்முள் யாராவது கடவுளை கண்டுவிட்டேன். காட்டுகிறேன் என்று சொன்னால் ஏமாறா தீர்கள். அதே சமயத்தில் நீயும் கடவுள்தான். நானும் கடவுள் தான், அதுவும் கடவுள்தான்.

**சேவடி ஏத்தும் செறிவுடை வானவர்**
**மூவடி தா என்றானும் முனிவரும்**
**பாவடியாலே பதம் செய் பிரமனும்**
**தாவடியிட்டுத் தலைப் பெய்து மாறே. (363)**

செறிவுடை - கூட்டம் கூட்டமாக வானவரும் மாவலி பால் வஞ்சகமாக குள்ள வடிவமாகப் போய் மூன்று அடிமண் இரந்த மாலும், முனிவரும், வேதம் பாடும் நாரதரும், தேடி அலைந்தும் முடிவுகாணாது எய்த்தனர். பாவடி கீத வடிவான வேதம். தாவடி இட்டும்-அலைந்து திரிந்தும் தலைப்பு - ஒளி பிளம்பின் முடிவும் முதலும்.

**தானக் கமலத் திருந்த சதுமுகன்**
**தானக் கருங்கடல் ஊழித் தலைவனும்**
**ஊனத்தின் உள்ளே உயிர் போல் உணர்கின்ற**
**தானப் பெரும் பொருள் தன்மையதாமே. (364)**

(கருங்கடல் தலைவன் - அரி, ஊழித் தலைவன் - அரன்) பிர்மா, விஷ்ணு, ருத்திரன் மூவருக்குள்ளும் நின்று இயக்குபவன் சிவனே. அவன் ஆட்டுவித்து ஆடுபவரே.

**ஆலிங்கணம் செய்து எழுந்த பரஞ்சுடர்**
**மேலிங்ஙன் வைத்ததோர் மெய்நெறி முன்கண்டு**
**ஆலிங்கணம் செய்துலகம் வலம் வரும்**
**கோலிங்கம் அஞ்சு அருள் கூடலுமாமே. (365)**

இந்த ஐந்தும்-அதாவது மண் துகள்கள், நீர்த் துளிகள், வெப்பம், காற்று, வெளி ஐந்துமே எல்லோரையும் தழுவித்தான் செல்கின்றன. அபிஷேகம் ஆய்கொண்டேதான் இருக்கின்றன. இதைத்தேடி ஏன் அலையவேண்டும். இது தவிர உலகில் வேறு என்ன புதுமை கண்டுவிட முடியும். இதை உடலில் அடைத்து சாக்கடை ஆக்குகிறோம். இப்படி உருவம் ஆகவேண்டும் என்ற எண்ணத்தை விட்டு விட்டாலே போதுமே. கோலிங்கம் - ஐந்துகுறிகள்.

**வாள் கொடுத்தானை வழிபட்ட தேவர்கள்**
**ஆள் கொடுத்து எம்போல் அரனை அறிகிலர்**
**ஆள் கொடுத்து இன்பம் கொடுத்து கோளாகத்**
**தாள் கொடுத்தான் அடி சாரகிலாரே. (366)**

வாள் கொடுத்தான் - அறிவாகிய ஒளியைக் கொடுத்தான். ஆள் கொடுத்து - அடிமைப்பட்டுக் கோளாக வலிமை உண்டாக. இந்த 'ஆள்' என்ற சொல்லின் பொருளை சிந்திக்க வேண்டும். மனதின் ஆளுமை (personality) ஆளுமை என்பது உயர்நிலை மனதைக் குறித்து வந்தது. இது விழிப்பு, கனவு (மயக்கம்), சுழுத்தி (உறக்கம்) முதலிய நிலைகளில் விளங்குவது. மனம் இல்லாத நிலையே துரியம். இவை அனைத்தையும் நடத்தும் தன் ஆட்சியில் வைத்திருப்பது ஆளுமை. (ஆள் + உள் + மை) என்றால் உயர்நிலை மனதை மையமாக்க் கொண்டு ஆட்சி புரிகிறது.

விழிப்பில் (Consciousness) மயக்கத்தில் (Unconsciousness) மயக்கத்திற்கும் உறக்கத்திற்கும் இடையில் சுழுத்தியில் (Inner conscious) உறக்கத்தில் (Sleep) மனமானது செயல் பட்டுக் கொண்டிருக்கின்றது. இப்படி பகலிரவாய் செயல்படு கின்ற இவை அனைத்தும் சித்தத்துள் நிகழ்கின்றன.

இவை அனைத்தையும் அறிகின்ற உயர்ந்த ஆழ்நிலை மனமானது (Super Conscious Mind) ஆற்றும் மகாசக்தியாய் விளங்குகிறது. சித்தத்தில் வசிக்கிறது. இங்குதான் மனம் ஆத்மா வோடு தொடர்பு கொள்கிறது. இதையே ஆள்கொடுத்து எம்போல் அரனை அறிகிலர் என்கிறார். அந்த ஆள் நம் ஆள், வேற்றாள், சிற்றாள் என்றெல்லாம் குறிப்பிடுவதை சற்று

சிந்தித்துப் பார்த்தால் மனதின் ஆளுமை என்பது புரியும்.

**ஊழிவலம் செய்து அங்கு ஒரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலை நீர் விதித்தது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியை வென்றானே (367)**

சதுமுகன் என்பது விநாயகர் நிலை. சதுர்த்தி. நாலாவது நிலை. சிவம், விஷ்ணு, சாக்தம், காணபத்யம் என்ற கர்த்திரு சாதாக்கியத்தில் உள்ள (ஓம்) நான்கு முகங்களுடைய நிலை.

பலகாலம் சிவனை நாடி நல்லறிவுடன் வழிபட்டு வலம் வந்து இடையறாது நாடினவருக்கு அன்புச்சிவம் நான்கு திரு முகங்கள் அதாவது அந்தக்கரணம் நாலு (மனம், புத்தி, சித்தம், அகம்) படைக்கும் ஆற்றலுள்ள கருவிகள் கொடுத்தருளினன். அது ஆலம் விழுது ஒத்து இருக்கும். வான் சக்தி. அதை ஜடையிலிருந்த வான்புனல் என்றார். மழை நீர் அருவிபோல் வருவது அல்ல. துளித்துளியாகவே கம்பி போல்தான் பெய்கிறது. பகீரதன் தவம் செய்து தன் முன்னோர்களை கரைசேர்க்க கங்கையை வேண்டி சிவனை நாடினார். கங்கை கோபமுடன் தரையை நோக்கி வீழ்ந்தாள். அதை பூமி தாங்காது என்று சிவன் தன் தலையில் தாங்கி அவன் சடாமுடி வழியாக வருவதாகக் கதை. இதையே ஓஸான் (Zone) என்கிறோம். கண், கண்ணாக ஒரு அடைப்பு உள்ளது. அது அழிந்துவிட்டால் உலகமும் அழியும். பிரளயந்தான்.

## 9. படைப்பு

இனி இயற்கையின் இயக்கத்தைப் பற்றி கூறுகிறார். ஐந்தொழிலில் முதலாவது படைத்தல். அதன்பின் காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல். ஆனால் நாம் அறிந்தது மூன்று நிலைகளே. நமக்குத் தெரியாது என்பதால் மற்றைய தொழில் நிற்பதில்லை. அதையும் அறிந்து முடிந்தவர்களே மனிதன். அறியாதவரை விலங்கினமே. மனம் என்று ஒன்று வந்தபின்தான் படைத்தல் ஏற்பட்டது. 18-ல் ஒன்பதாவது நிலை மனம்.

**ஆதியோடு அந்தம் இலாத பராபரம்
போதமதாக புணரும் பராபரை
சோதி அதனில் பரம் தோன்ற தோன்றுமாம்
தீதில் பரையதன் பால் திகழ்நாதமே. (368)**

தொடக்கமும், ஈறும், பிறப்பு இறப்பு, எழுச்சி அடக்கம் ஆகிய ஆதியோடு அந்தமும் இல்லாத பரிசுத்தமான வெட்ட வெளிதான் முதல் நிலை. அதிலிருந்துதான் முதலாவது வேறு

பட்டு வெளிபட்டு ஆதி என்று பெயரிட்டு நம் போன்றவர் அழைத்தனர். உடலில்லா அகரத்துக்கு உடலாக புணரும் பேரருள் பராபரை எனப்படும். பரை என்றால் ஒலி - நாத சத்தி. சம நிலையிலிருந்து மேல் எழுந்தால் அதற்கு ஒரு உந்துதல் தேவை. அதுவே ஒளி. அதனுடன் சேர்ந்த 'அ'க்னி இதையே வள்ளுவர் 'அ'கர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு என்றார். ஆகவே பரந்த இடத்தில் மேல் எழுந்து உதயமானது (தோற்றத்துக்கு வந்தது) ஒலியும், ஒளியும் இதை சக்தி, சிவம் என்று நாம் (தமிழ் மக்கள்) அழைக்கிறோம். அதை சதாசிவம் என்போம். இதுதான் சதா - ஐக்யம் = சாதாக் கியம் என்பர்

**நாதத்தில் விந்துவும், நாத விந்துக்களில்**
**தீதற்ற அகம் வந்த சிவன் சத்தி என்னவே**
**பேதித்து ஞானம் கிரியை பிறத்தலால்**
**வாதித்த இச்சையில் வந்து எழும் விந்துவே. (369)**

ஓசையாகிய நாதத்தினின்றும் ஒளியாகிய விந்து தோன்றும். ஓசை செவிக்கு புலப்படுவது. ஒளி கண்ணுக்குப் புலப்படுவது. அது வரி வடிவம். இரு மெய்களிடம் இருந்தும் சிவன் சிவை என்று நாம் நாமமிட்டு அழைக்கிறோம். அவரவர்கள் அவர்கள் இஷ்டம்போலும் அழைக்கலாம். இங்கேதான் மொழி வேறுபாடு தோன்றிற்று. ஒரே பொருளை பலர் பலவிதமாகப் பெயர் சொல்லி என் சாமி உன் சாமி என்று வாதித்துக் கொள்வது. சிவன்பால் பேரறிவும் சத்தியிடம் பேராற்றலும் தோன்றும். பேரன்பு எனப்படும் இச்சை என்றும் ஒன்றுபோல் (இருப்பு) நிற்பதென நிலை நிறுத்தப்பட்டது. அதாவது விருப்பம். அந்த விருப்பம் விந்துவில் தோன்றும்.

**இல்லது சத்தி இடந்தனில் உண்டாகி**
**கல் ஒளிபோலக் கலந்து உள் இருந்திடும்**
**வல்லது ஆக வழி செய்த அப்பொருள்**
**சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே. (370)**

இல்லது - மாயை, வல்லது வழி ஆக - மாயை மூல மாக, சொல்லது - புகுந்து சொல்லாக மாறி வெளி வருவது - புகழ் தூராதி தூரம் - அது விரிவுடையது. செல்வாக்கு. (Amplification) உலகு, உடல், உயிர் (உண்பொருள் - உட்கு) காரியம் தோன்ற கடமெனப்படும் - இல்லாயுள்ளது மாயை. உள் அதாகிய மாயை சத்தியால் செயல்படும். சத்தியும் சிவமும் (கண் (இடம்) அதிலுள்ள மணி அதன் வீச்சு ஒளி) மணியும் ஒளியும் போல - கலந்து உள் இருந்திடும் (மனத்தின் உள் மணி மனோன்மணி) கல் - மணி. வாயுவும் மனமும் கடந்தது. வல்லது - உறுதியானது.

**தூரத்தில் சோதி தொடர்ந்து ஒரு சத்தியாய்**
**ஆர்வத்து நாதம் அணைந்து ஒரு விந்து வாய்ப்**
**பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்கும்**
**சார்வத்துச் சத்தி ஓர் சாத்து மான் ஆமே. (371)**

மாற்றம் மனம் கழிய நிற்பவன் சிவன் அவன் தொலைவில்த் தோன்றும் சுடர் சோதியாயுள்ளான். அன்பினால் அவனைத் தொடர்ந்து ஒரு ஆற்றல் (சத்தி) தோன்றிற்று. அந்த சத்தியின் விருப்பத்தால் நாதம் தோன்றிற்று. அதன்பின் கலையாக விந்து தோன்றும் (விண்ணிலிருந்து இழிந்தது-விழுது) அதன்பின், அறிவும் ஆற்றலும் ஒப்ப நிற்கும் சிவம். இச்சை செயல் அறிவு ஆற்றலால் இலய போக அதிகாரப் பொருள். அந்த ஏக சிவன் எனப்படும். சதாசிவ மெய்யைத் தொடர்ந்து நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து கூட்டம் தோன்றும். பூதம் ஐந்திற்கும் (சாராத) சார்பிடமாய் இருப்பது சத்தி எனும் பேரறிவு. அது சிவனைச் சார்ந்து இருப்பதால் சாத்துமான் என்றும் கூறுவர். இதுவரை சுத்த மாயையின் விந்துவின் (நினைவோசை) வேறுபாட்டு நிலைகளை அறிந்தோம். இம்முறை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றுவதன்று. ஒரே இடத்தில் பல அறைகள் இருப்பது போல. நாலு சுவருக்குள் அமைந்த வீடு. அதன் உள், சமையல் அறை, குளியல் அறை, படுக்கும் அறை, பொது வரவேற்பறை என்பதுபோல். இதனைப் பகுப்பமைப்பு என்பர். இதையே விர்த்தி என்றும் கூறுவர். பாரம். - பெருமை வத்து - பொருள்.

**மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்**
**கானின் கண் நீரும் கலந்து கடினமாகி**
**தேனின்கண் ஐந்தும் செறிந்து ஐந்பூதமாகி**
**பூவின் கண் நின்று பொருந்தும் புவனமே. (372)**

கண் என்றால் தமிழ் மொழி இலக்கணத்தில் ஏழாம் வேற்றுமை உருபு - இடம் என்பதே பொருள். அது 'மான்' என்பது நீருக்கு இடம். 'கான்' என்பது காற்றுக்கு இடம். தேன் எனும்போது நெருப்புக்கும் இடம் இவை எல்லாம் சேர்ந்து பார் (மண்) வை ஆகிறது. பார்முதல் பூதம். பரத்தை மறைத்தது. பரத்தில் மறையும் பார்முதல் பூதம். மோஹினி என்பது அசுத்த மாயைக்கு வேறு ஒரு பெயர். அதன் நிறம் வெண்மை. அதில் கலை தோன்றும். அக்கலையிலிருந்து மூலப் பகுதி தோன்றும். அதற்கு மான் என்று பெயர். வள்ளி பிறந்த இடம். அக்குழந்தை ஐம்புல வேடரால் வளர்க்கப்பட்டது. விந்து மோஹினி மான் பெந்தமுறவே பிணிப்பித்து இறுப்பு மெய்யாகிய புத்தி தத்துவத்துக்கு புத்திமான் என்று பெயர். இதிலிருந்து 'நான்' என்ற ஆங்காரம் தோன்றும். இவ்வெழுச்சி

மூவகைப்படும். அவை உணர்வு, உழைப்பு, உலகம் என்பர். இவற்றுள் உலக எழுச்சியிலிருந்து (புவனம்) ஐந்து பூதங்களின் நுண்மைப்பகுதி தோன்றும் (Microspic) அதுவே தன்மாத் திரை. அதிலிருந்து வான், வளி வளர்ந்து தோன்றும். கானலாகிய தீயும், நீரும் எல்லாம் கலந்து கடினமாகி நிலமும் தோன்றும். முறையே இவற்றின் நிலைக் களமாகிய நுண்மையினை, சுவை (நாக்கு), ஒளி (கண்) ஊறு (உணர்வு உடல்), ஓசை (காது), நாற்றம் (நாசி) இவ்வகை பூதக்கூட்டமே புவனம் என்பது 216+8=224 என்பர்.

**புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி**
**புவனம் படைப்பாருக்கு புத்திரர் ஐவர்**
**புவனம் படைப்பானும் பூமிசையானாய்**
**புவனம் படைப்பான் அப்புண்ணியன் தானே. (373)**

ஒருவன் (சிவன்) ஒருத்தி (சத்தி) ஓர் உடம்பின் கண்ணே தோற்றுவித்து புவனம் முழுவதும் படைப்பவனாவான். அப்பொழுது அவனுக்கு பிரம்மம் என்று பெயர். பேரறிவும் பேராற்றலும் சீராக ஒருங்கமைந்த இவர்க்கு, மக்கள் என்று சொல்லப்படுபவர் ஐவர். அவர்கள் அருளோன் (சதாசிவம்), ஆண்டான் (மகேசன்), அரன் (உருத்திரன்), அரி (மால்), அயன் (பிர்மா) என்பர். பூமிசையான் நான்முகன். முழுமுதற் சிவன்.

**புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்**
**தண்ணிய மானை வளர்த்திடும் சத்தியும்**
**கண் இயல்பாக கலவி முழுதுமாய்**
**மண் இயல்பாக மலர்ந்தெழு பூவிலே. (374)**

நம்முள் புகுந்து தீயாக இருப்பவன் புண்ணியன் நந்தி அவன் பொருந்துதலால் திருவருள் ஆற்றலாம். சத்தியும் உலக மென்னும் தண்ணளியுடன் பொருந்தி நிற்பன். பொருந்தி மாயையாகிய உடல் மெய்யினை வளர்த்து அருள்வன். கண்ணுத லாகிய (நெற்றிக்கண்) திருவுள்ளம் கொண்ட இயல்பினாலே ஐம்பூதம் முதலிய தத்துவங்கள் ஒன்றோடு ஒன்று கலந்து நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள் விசும்பு முதலாகிய உலகங்களாக விரிந்து தோன்றும். இப்பூதங்கள் அகத்தும் புறத்தும் காணப் படும். புறத்தில் காணப்படுவது அண்டம், உடல் உள் காண்பது பிண்டம் (பிரதிபலிப்பு) எனவும் கூறுவர். கண்ணுதல் - கருதுதல். உடல் மெய் - ஆன்ம தத்துவம் 24.

**நீரகத்து இன்பம் பிறக்கும். நெருப்பிடை**
**காயத்தில் சோதி பிறக்கும் அக் காற்றிடை**
**ஓர் உடை நல்லுயிர்ப்பாதம் ஒலி சத்தி**
**நீரிடை மண்ணின் நிலைப் பிறப்பாமே. (375)**

மண்ணிடை கலந்தவர்கள்போல் மனிதர்கள் அவர்கள் காண்பது நீரில் எழுத்து. நெருப்பினிடத்து ஒளி தோன்றும். அதன்மேல் விளங்கும் நீராவியில் சுவை இன்பம் தோன்றும். அதன்மேல் காற்றிடத்து ஒலி தோன்றும். உயிர்ப்பு பிறக்கும். காயம் - ஆகாயம். முதல் குறை வானம். உயிர்ப்பு மூச்சு. நல்லுயிர்ப்பு அனைத்து உயிர்க்கும் ஒத்த நன்மை தரும் காற்று. ஓர்வுமை ஒளிர ஆராய்வதற்கும், நினைவுறுதற்கும் துணையாம். ஓசை அகம்-ஒளி. ஒன்றினின்றும் ஒன்று தோன்றுவ தல்ல. எல்லாம் ஒரே நேரத்தில் தோன்றுவனவே. உயிர்ப்பு, ஆதம், சத்தி, நிலை என்பன முறையே காற்று, தீ, வானம், நீர், நிலம் என்பனவே.

**உண்டு உலகு ஏழும் உமிழ்ந்தான் உடனாகி**
**அண்டத்து அமரர் தலைவனும் ஆதியும்**
**கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்**
**பண்டிவ்வுலகம் படைக்கும் பொருளே! (376)**

ஏழு உலகத்தையும் உண்டு உமிழ்த்தவன் மாயன். (இது நம் கண் வழியே செல்லும் ஏழு நிறத்தை உண்பதைக் குறிக்கும்) அதனால் உலகோர் (கண்) கண்ணனை மண் உண்ட மாயன் என்பர். கண்ணுக்கும் கருத்துக்கும் முறையே தோன்றும் பருஉடல் நுண்ணுடலாகிய உடல் மெய் இருபத்தி நான்கினையும் காப்பவன் மாயன். அத்தகைய அரியும் அவனுடனாகி அவனுக்கு மேற்பட்டு நிற்கும் அண்டத்து அமரர் தலைவனாகிய அரனும், திருவாணையால் ஆதியாகிய படைத்தல்த் தொழிலைச் செய்யும் (ஆதியும்) காரணனாகிய அயனும் முழுமுதற் கடவுளாம் சிவபெருமானாய் முன் ஏற்பாடாக படைக்கப்பட்டவர்கள். இச்சிவன் நாலாம் நிலைச் சிவன். நாலாம் நிலை-துரியம், ஆதி - காரணன்.

**ஓங்கு பெருங்கடல் உளளுறு வானொடும்**
**பாங்கார் கயிலைப் பராபரன் தானும்**
**வீங்கும் கமல மலர்மிசை மேலயன்**
**ஆங்குயிர் வைக்கும் அது உணர்ந் தானே. (377)**

பால் கடலில் (ஒளியில்) சயனித்திருப்பவன் விஷ்ணு. செந்தாமரை மலர்மேல் இருப்பவன் அயன் (இவை எல்லாம்) அணுவில் காண வேண்டிய விண்ஞானம் - இவர்கள் வாயிலாக படைத்தல் காத்தல் செயல் செய்தருளுபவன் சிவன்.

**காரணன் அன்பில் கலந்து எங்கும் நின்றவன்**
**நாரணன் நின்ற நடு உடலாய் நிற்கும்**
**பாரணன் அன்பிற் பதம்செயும் நான்முகன்**
**ஆரணமாய் உலகாய மர்ந்தானே. (378)**

இயற்கையையும் இயக்கத்தின் உண்மையான நோக்கத்

தையும் அறிந்து அவரவர்க்கு ஏற்பட்ட தொழிலை ஒழுங்காகச் செய்து வந்தால் குழப்பமே கிடையாது. படைப்பில் எல்லோரும் நல்லவரே. அதன்பின் நாம் உயர்வு தாழ்வு, ஜாதி, சமயம், மொழி, நாடு, பால் வேற்றுமை எல்லாம் கற்பிக்கப்படுகிறோம். அதுவே விஷக்கலப்பு, நச்சுக் கொடி. எல்லோரும் சமம் என்ற எண்ணத்தை வளர்ப்பதே இறைவனின் நோக்கம். அதுவே சைவம். அன்பு மதம். அறிவு மதம். காரணன், நாரணன், பாரணன் எல்லாம் தொழிலால் ரூபமும், நாமமும் வேறானர். அடிப்படையில் மூவரும் ஒன்றேயாம். இதுதான் நாம் அடைய வேண்டிய பூரண அறிவு. இது புரிந்துவிட்டால் புரிவு நிலையாகும்.

**பயன் எளிதாம் பருமாமணி செய்ய**
**நயன் எளிதாகிய நம்பன் ஒன்றுண்டு**
**அயன் ஒளியாயிருந்து அங்கே படைக்கும்**
**பயன் எளிதாம் வயணம் தெளிந்தேனே. (379)**

சிவன் ஆருயிர்களில் சில்வற்றை தகுதியுடையவனாக ஆக்கி அவற்றைக் கொண்டு ஏனைய உயிர்களுக்கு வேண்டும் துணை புரிகின்றான். அவன் உள்முகமாய் நின்று செய்து அருள்வதாகும். செம்மண் - மாணிக்கம் - நெருப்பு நிறம் நயன் - இன்பம். ஒளி - சிவஞானம், வயனம் - காரணம்.

**போக்கும் வரவும் புனிதன் அருள் புரிந்து**
**ஆக்கமும் சிந்தையும் ஆகின்ற காலத்து**
**மேக்கு மிக நின்ற எட்டுத் திசை யொடும்**
**தாக்கும் கலக்கும் தயாபரன் தானே. (380)**

"அவனன்றி ஓர் அணுவும் அசையாது" என்ற ஆப்த மொழி எழுத்துக்கு எழுத்து உண்மை ஆகும். உலகில் நடக்கும் எல்லா இயக்கத்துக்கும் சக்தி அவன் ஒருவனே. சிந்தையில் திருவுள்ளக் குறிப்பரலேயே, சொல்லாமல் சொல்லி, நினையாமல் நினைந்து, செய்யாமல் செய்து செயல்படுகிறான். நம்மையே ஆராய்ச்சி செய்தால் ஒன்றுமே புரியாது. எப்படி பிறந்தோம், எப்படி வளர்கிறோம், சாப்பிட்டதை ஜீரணம் செய்வதோ, நாம் பார்ப்பது கேட்பதின் நுட்பம், மனம், உணர்வு, உயிர் எதையும் காட்டமுடியாது. இறப்பதும் தெரியாது. அடுத்த நிமிடம் என்ன நடக்கும் எதுவும் தெரியாது. பின் ஏன் அந்தக் கடவுளை நம்பமாட்டேன் என்கிறோம்.

**நின்று உயிராக்கும் நிமலன் என் ஆருயிர்**
**ஒன்று உயிராக்கும் அளவை உடலுற**
**முன் துயரொக்கும் உடற்கும் துணையதா**
**நன்று உயிர்ப்பானே நடுவு நின்றானே. (381)**

(ஒன்று - உடலுற-உயிரை உடலோடு சேர்க்கும்போது) முந்திய - உடற்கு - ஊழின்படி படைக்கும் உடல் உள்ள

உயிர்க்கு உயிராய் நின்று எல்லாவற்றையும் இயக்கும் சிவபெருமான் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன். அது நம்மிடம் எது என்று கவனித்தால் புரியாதா? ஆருயிர்களை அன்பு செய்தற்கு கருவியாகிய உடலுடன் ஒன்றும்படி பொருத்து பவனும் அவனே. அக்காலத்து உயிர்கள் முன் செய்துகொண்ட வினைக்கு ஈடாக பேறு, இழப்பு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்னும் ஆறும் அவ்வுயிர்களுக்கு கருவினுள் அமையப் படைத்தருள்வன். அவன் அனைத்திற்கும் நடுவாய் காவலாய் நின்றருள்கின்றான். உயிர் மூச்சாய் நின்று விளங்குவான்.

**ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்**
**வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்**
**போகின்ற சீவன் புகுந்த உடலாய் உளன்**
**ஆகின்ற தன்மை செய் ஆண்டகையானே. (382)**

சொல் உலகும் பொருள் உலகும் சிவபெருமான் அருளால் மீண்டும் மீண்டும் தோன்றும். அக்காலத்து சிவமணியும், கொன்றை மாலையும் அணிந்து திகழ்வான். அவன் திருமேனி பொன்போன்று அழகு வாய்ந்தது. அந்திரச் சோதி. பேரொடுக்க காலத்து உலகினையும் உடம்பினையும் ஒருங்கிச் செல்லும் ஆவிகளுக்கு புகலிடமாய் நிற்பான். ஆகின்ற தன்மையில் உலகம் உண்டாதற் பொருட்டு அக்குமணி - உருத்திராட்சம். மேலணி - மேலாகிய அணி.

**ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்**
**இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்**
**பருவங்கள் தோறும் பயன் பலவான**
**திருஒன்றின் செய்கை செகமுற்றுமாமே. (383)**

ஆண்டவனும் ஆண்டாளும் நவராத்திரிக் கொலு மாதிரி பொம்மைகள் மாதிரி உயிரினங்களைப் படைத்து - படைத்த மூலப்பொருள்கள் (மண், நீர், வேக்காடு, வர்ணம், ஆபரணம்) எல்லாம் ஒன்றேதாம். அதுதான் எட்டும் இரண்டும் ஆனால் உருவ அமைப்பில் வேறுபாடு. எல்லாம் ஒன்றாக இருந்தால் இரசிக்காதே. எதிர் எதிர் நிறம். எதிர் எதிர் ருஜி, எதிர் எதிர் குணம், இப்படி வேறுபாடு 84,600 யோனி பேதம். சத்தி சிவம் ஒன்றானால் விளையாட்டும் முடியும்.

**புகுந்து அறிவான் புவனாபதி அண்ணல்**
**புகுந்து அறிவான் புரி சக்கரத்து அண்ணல்**
**புகுந்து அறிவான் மலர்மேலுறை புத்தேள்**
**புகுந்து அறிவும் முடிக்காதி நின்றாரே (384)**

இதன் பொருள் முன்னே சொல்லியதுதான். புரி சக்கரத்து அண்ணல் - விஷ்ணு, மலர் மேலுறை புத்தேள் பிர்மா அவருள்ளும் சிவன் புகுந்து செயல்களை செவ்வனே செய்ய

வைக்கிறான். புவனாதிபதி - உலக முதல்வியின் முதல்வர் ஆதிக்கு மேல் அனாதி.

**ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவரும்
காரிய காரணர் ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழிலால் விந்துவில் பிறந்து
ஆணவம் நீங்கா தவரெனலாகுமே. (385)**

ஆணவ ஆற்றல் அகன்றாலும் (அறியாமை) பழைய வாசனை பயிற்சி வயத்தால் ஏற்படும் பசை ஆற்றலையே ஆணவ சத்தி என்பது. சபலம். அப்பசை அகல சுத்த மாயையில் தோன்றும் நிலைக்களம் ஐந்து ஆகும். இவைகளை இயக்கும் கடவுளரும் ஐந்து ஆவர். இவர்களை உயிர்ப்பால், உடையான் பால், உயிர்ப்பால் அனுப்பக்கம் உடையான்பால் - சம்பு பக்கம் ஆணவ மலம் ஒன்றுடைய அனுபவி சதாசிவமுதல் ஐவர் ஆவர். மகேசன், உருத்திரன், விஷ்ணு, பிர்மா, சம்பு பக்ஷந்தர்- விந்து, நாதம், சத்தி, சிவம் முதலியோர் ஒரு மலத்தார்.

**உற்று முப்பாலொன்று மாயாள் உதயமா
மற்றைய மூன்று மாயோதயம் விந்து
பெற்றவன் நாதம் பரையிற் பிறத்தலால்
துற்ற பரசிவன் தொல் விளையாட்டிதே. (386)**

அருஞ்சைவர் தத்துவம் முப்பத்தாறனுள் சிவ தத்துவம் ஐந்து போக, ஜீவதத்துவம் இருபத்தி நாலு, வித்யா தத்துவம் ஏழும்-முப்பத் தொன்று. இதை அசுத்தமாயை என்பர். முப்பாள் ஒன்று மற்றைய மூன்றாகிய ஆசான் மெய் ஆண்டான் மெய். அருளோன் மெய் மூன்றும் சுத்த மாயையின் விளக்கங்கள் ஆகும். இவ்விந்து (நினைவு) நாதத்தில் தோன்றும் நாதம் பரை நிறையில் தோன்றும். இவை அனைத்தும் சிவபெருமான் பரையில் பொருந்துவதால் தோன்றுவன. இனி முப்பால் படைத்தல், காத்தல், துடைத்தல் ஆகிய தொழிலுக்குரிய முப் பண்புகளென்றாலும் ஒன்று. இம்முப்பண்புகள் மூலப்பகுதியில் தோன்றின. இவை அமைதி (சாத்வீகம்) ஆட்சி (இரஜஸ்) அழுந்தல் (தமஸ்) என்ற முக்குணங்கள். இம்மாயையின் குணம் கடவுளர்க்கும் உள. உணர்த்து மெய், உணர்வு மெய், உடன்மெய் மூன்றும் காரண மாயையில் தோன்றுவன. இதை விந்து, மோகினி, மான் என்பர். ஐந்து-தூமாயை மோகினி- தூவாமாயை. மான் மூலப்பகுதி இவை அனைத்தும் நீக்கமற கலந்து வேற்று நிற்கும். பரசிவத்தின் திருவிளையாடல்.

**ஆகாயம் ஆதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுள் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரண்மால் பிரமனாம்
ஆகாயம் பூமி காண அளித்தலே. (387)**

வான், வளி, தீ, நீர், நிலம் எனும் ஐம்பூதங்களும் முறையே இயக்கும் கண்காணாத் தெய்வங்கள் அருளோன், ஆண்டான், அரண், அரி, அயன் எனும் ஐவரும் தோற்றக் கேடில்லாத திருவருள் ஆற்றலுடன் போந்தனர். நாம் காணும் வான்முதல் பூமிவரை இந்த ஐவரின் ஆற்றலினாலேயே அதற்கு மாகாயம் என்பர்.

**அளியார் முக்கோணம் வயிந்தவம் தன்னில்**
**அளியார் திரிபுரையாம் அவள்தானே**
**அளியார் சதாசிவமாகி அமைவாள்**
**அளியார் கருமங்கள் ஐந்து செய்வாளே. (388)**

தூமாயையின் கண் திருவருள் நிலைக்களமாம் முக்கோணம். மாயை என்றால் நிலையற்றது என்று பொருள். மாறிக்கொண்டே இருப்பது அதை புரிந்துகொண்டு வாழ்பவருக்கு ஆசை இருக்க காரணம் கிடையாது.. நிலைபெற்ற வாழ்க்கை போலக் கருதி வாழ்வது, திட்டமிடுவது நகைப்புக்குரியது. முக்கோணம் என்பது அப்படி வாழ்க்கையில் முக்கோணம் இருந்தே ஆகும். ஞானம், ஞாதுரு ஞேயம். காண்பான் காட்சி காணப்படுபொருள். கேட்பான், கேள்வி, கேட்கும் பொருள், உண்ணல், உண்பான் உண்ணும் பொருள், தொடுவான் தொடுபடுபொருள், தொடுபடு உணர்வு. இப்படி 15-ம் அனுபவிப்பவன் ஒருவனும் இருந்தே ஆகும். இதையே அறம், பொருள், இன்பம் என்பது. மூன்றையும் விட்டது வீடு. அது ஒரு கோணம். மூன்றை நாலு, ஆறு, ஏழு, எட்டு என்று விரிக்கலாம் அது விர்த்தி. ஒன்றாக்கி அதையும் இல்லாமல் ஆக்குவது நிவர்த்தி - அனாதிநிலை. ஆனால் எல்லாவற்றிற்கும் அருவமே மூலப்பொருள். அம - கருணை. முக்கோணம் வயிந்தவம் - முக்கோணம் - திரிபுரை. சக்கரத்தில் உள்ள மூலஎழுத்து சதாசிவம் - அதாவது ஆகாயம். அதற்கு ஐந்தொழில்கள் உண்டு - 16 கோணம்.

**வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி**
**காரணி காரியமாகக் கலந்தவள்**
**வாரணி ஆரணி வானவர் மோகினி**
**பூரணி போதாதி போதமுமாமே. (389)**

தன் கண்ணை மறைக்கும் தன்மை வாய்ந்த நச்சுப்பூண்டு அசுத்த மாயை. கண் இருந்தும் குருடராய் வாழ்பவரே நம்மில் அதிகம். உலகியலில் காணும் அரசியல், பொருளியல் இவைகளில் பிரமுகர்கள் செயல்களை கவனித்தாலே இது புரியும். தேவையில்லாமல் பணத்தைச் சேமிப்பது, தேவையில்லாத வீடுகள், வாகனங்கள், அறிவுள்ளவன் இப்படி குவிதலை விரும்ப மாட்டான். அப்படி மங்கிய பார்வை உள்ளவர்கள் நிலை மனோன்மணி என்ற நிலை. ஒரு மலத்தார் என்று சொல்லலாம்.

சிவன் நிலையை கவனிக்க இது இரண்டாவது பக்ஷநிலையே. பரண்கலம், மங்கலம், மாண்கலம் பூட்பவர் நல்லோரே. ஆனால் அதுவும் விலங்குதான் என்பதைப் புரியாதவர். சிலர் ஆஸ்ர மங்கள் அமைத்து பணத்தை குவித்து நல்லது செய்வதாகச் சொல்லிக்கொண்டு பள்ளிக்கூடம் கட்டுகிறேன், ஆஸ்பத்திரி கட்டுகிறேன் கோயில் கட்டுகிறேன் என்புதெல்லாம் இந்தப் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டியவரே. புகழ், பண வெறியில் வீழ்ந்தவரே வாரணி. காத்தலைப் புரிபவன் ஆரணி - துடைத் தலை புரியும் - கரணி, மோகினி - மறைத்தலைப் புரியும் ஆதி. பூரணி - அருள்தலைப் புரியும் திருவருள் ஆதிபோதம். இயற்கைப் பேரறிவு பெரும் பொருள். இங்ஙனம் எல்லாமாய் நிற்பவள் போதாதி போதம். போதம் + ஆதிபோதம். போதம் - சிற்றறிவு. அதிபோதம் - பேரறிவு.

**நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்**
**சென்று அங்கு இயங்கும் அரன் திருமாலவன்**
**மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்**
**என்றிவ்ராக இசைந்திருந் தானே (390)**

திருவருளுடன் தானாய் நின்று நிறைந்த ஆண்டானும், திருஆணை வழி இயங்க இயங்கும் அரண், அரி, அயன் எனும் மூவரும் கலப்பால் சிவபெருமானேயாவர். இந்த விளக் கத்தை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும். உருவமும், பெயரும், வேஷமே. உண்மை அல்ல. உள்ளிருந்து செயல்படும், செயல்படுத்தும் சிவத்தன்மையே உண்மை. படைக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் ஒரு காரிய நிமித்தமே. அது அது அந்தக் கருவி மூலம் வேலை வாங்கப்படுகிறது. இதில் பாவ புண்ணியத்துக்கு இடமில்லை. நாம் என்ன செய்யத் தூண்டப் படுகிறோமோ அதைச் செய்ய வேண்டியது நம் கடமை. என் கடன் பணி செய்து கிடப்பதே. முடிவு பற்றி நாம் கவலைப் படவோ, மகிழ்ச்சியடையவோ உரிமை கிடையாது. இசைந் திருத்தல் ஒன்றே நாம் செய்யக்கூடியது. கடமையைச் செய் பலனை எதிர்பாராதே எனபதின் தாத்பரியம் இதுவேயாம். உருவம் எல்லாம் கருவியே.

**ஒருவனுமே உலகேழும் படைத்தான்**
**ஒருவனுமே உலகு ஏழும் அளித்தான்**
**ஒருவனுமே உலகேளும் துடைத்தான்**
**ஒருவனுமே உலகோடு உயிர்தானே. (391)**

ஆகவே நாம் விளங்கிக் கொள்ளவேண்டியது எல்லாம் ஈசன் செயலே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழிலையும் முழுமுதற் சிவன் திருவுள்ள மாகிய நினைப்பவனே செய்து அருளுவன். அம்மட்டோ உயிரின்

வேண்டுகோளை ஏற்று அவ்வுயிர்களைக் கொண்டும் புரிந் தருள்வன். இஃதன்றோ கடவுள் தன்மை.

**செந்தாமரை வண்ணன் தீவண்ணம் எம் இறை**
**மைந்தார் முகில் வண்ணன் மாயம் செய் பாசத்தும்**
**கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்தும்**
**அந்தார் பிறவி அறுத்து நின்றானே. (392)**

சிவதத்துவம் என்பதே நெருப்புத்தான் ஆரம்பம். நெருப்பின் நிறம் சிகப்பு. அதை இறைவனின் தீ வண்ணம் செந்தாமரை என்றார். அவன் திருவடித்தோற்றம் அடுத்த சிவதத்துவம் காற்று. அதற் நிறம் கருப்பு. வானின் கண் வானாகி வாயு வளரும். அதை முகில் வண்ணன் (மேகநிறம்) என்றார். மாயன் மயக்க ஆசையால் மனம் வாசனை பெறுகிறது. மலர்மிசை ஏகினது மணம். பெண் என்பது அருவ நிலையின் நீர்த்துளி களின் கூட்டம். அது மழையாக மாறும்போது கம்பி போன்ற குழல் ஆகும் தோற்றத்தில். இதையே நெருப்பு, நீர், காற்று மூன்றும் சேர்ந்து ஆவி (நிறைவு) ஆவதையே பிறவி என்பது. அதை அறுக்க வல்லவன் அந்தார். அந்தம் + ஆர். அந்தம் = இருள். ஆர் = நிறைந்த இருளை ஒழிப்பவன் ஒளியே.

**தேடும் திசை எட்டும் சீவன் உடல் உயிர்**
**கூடும் பிறவிக்குணம் செய்த மாநந்தி**
**ஊடுமலர்தமது உள்ளத்தின் உள் நின்று**
**நாடும் வழக்கமும் நான் அறிந்தேனே. (393)**

உண்மை அறிந்தவர்க்கு தேடல் கிடையாது. அப்படி தேடுகிறது என்றால் அது சீவன்தான். அப்படி சீவாத்மாக்களால் சூழப்பட்டதே எட்டுத் திசையும். அதாவது ஆவியால் சூழப்பெற்ற உலகம் அவை வாழும் பொருட்டு உடலை நாடுகின்றன. அப்படி இரண்டையும் சேர உதவுபவது நம் தீ. பச்சை மண்ணில் குடம் செய்து அதைச் சூடு செய்தால்தான் அந்தக் காய்ந்தமண் ஓடாகும். அப்படிக் காய்ந்த மண்தான் நம் உடலென்னும் காயம். கூடும் பிறவிக்கு குணம் செய்த மாநந்தி. பிறவி எடுத்த உயிர்கள் சிவநெறியில் வராமல் ஊடுதலாகிய மாறுபட்ட பாதையில் திரும்பின. அவைகளுக்கு ஊடு சென்று - உள்ளத்துன் மறைந்து நின்று அதனை ஆராயும் முறைமை யினையினும் மேற்கொண்டு உள்ளான் சிவன். மேய்ப்போன் அதனையும் அறிந்துள்ளேன் என்கிறார் திருமூலர்.

**ஓர் ஆயமே உலகு ஏழும் படைப்பதும்**
**ஓர் ஆயமே உலகு ஏழும் அளிப்பதும்**
**ஓர் ஆயமே உலகு ஏழும் துடைப்பதும்**
**ஓர் ஆயமே உலகோடு உயிர்தானே. (394)**

சிவனும் சிவையும் கூடுவதாலேயே உலகு ஏழும் ஏழு

விதமாக் (கிரகங்கள்- வார நாட்களாக) காரியப்படுகின்றன. அவை நிற்பது போல் தோற்றம் அளிப்பதும் நீர் சக்தியே. சிவன் என்பது சாகாக்கால். சிவை என்பது போகாப் புனல். இவை இயங்கும் இடம் வேகாத்தலை இதுதான் முப்பொருள் உண்மை. ஆகவே சிவனும் சிவையும் ஒன்றே ஆனாலும் வேறுபட்டது போல் தோன்றுவதே மாயை என்பது. மனமாற்றம் இதனை தானாதல் என்பர் - தாதாமியம். தான் என்பது தான் உண்மை. தானானே தானதானேன் என்ற சொல் இதையே குறிப்பிடும்.

**நாதன் ஒருவனும் நல்ல இருவரும்**
**கோது குலத்துடன் கூட்டிக் குழைத்தனர்**
**ஏது பணி என்று இசையும் இருவருக்கும்**
**ஆதி சிவனே அருளுகின்றானே. (395)**

எல்லோராலும் நடத்தப்படும் முதன்மையுடையவன் நாதன். பதி, கணவன், புருடன் எல்லாம் சொல்லால் வேறுபடும். பொருளால் ஒன்றேயாம். அதுதான் ஒளி. புகுந்து உருவுடன் இருப்பவன் புருடன். அவன் கண்ணை இடமாகக் கொண்டதால் கண் + அவன் = கணவன். அது ஒலியோடு கூடி இருப்பதால் (துடிப்பு) நாதன். நினைவுகள் பதிவதால் பதி. நன்மைக்குரிய அரியும் அயனும் தூமாயை நல்ல இருவர் - அசுத்த மாயை ஜீவதத்துவம் 24, வித்யா தத்துவம் 24 + 7 = 31, உடன் கலப்ப தால் அதுவே நம் உடம்பும் உயிருமாகிறது. கோது குலத்துடன் கூட்டிக் குழைந்தனர். இவர்கள் இருவரும் ஏது பணி? நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டபோது, ஆதி சக்தி (அணுவின் அணு - ஆதிப்பிரான்) அருளுகின்றான். சூட்சுமமான அந்தக்கரணம்-மனம், புத்தி, சித்தம், அகம் என்று நானாவித மாக - நான் முகனாக.

**அப்பரிசு என்பத்து நான்கு நூறாயிரம்**
**மெய்ப்பரிசு எய்தி விரிந்து உயிராய் நிற்கும்**
**பொய்ப்பரிசு எய்திப் புகலும் மனிதர்கட்கு**
**இப்பரிசே இருள்மூடி நின்றானே. (396)**

ஆகாயத் தத்துவத்தில் வந்தது பதினைந்தும் அதை அறியும் அறிவு ஒன்றும் பதினாறு கலைகளே, அது அறுபது, அறுபது, அறுபது (கணம்-60, நிமிடம்-60, நாழிகை-60 என்று பெருக்கி னால் 84,600 வரும். இது விரிவு. ஆனால் நிலை பெறாத ஆவியே என்றும் பதினாறாக இருப்பது சதாசிவ தத்துவமே. எண்ணத்தில் பெரிதாக இருந்தாலும் பொருள் சிறிதே. ஆகவே பொய்யை உடமையாகக் கொண்டு பெருமை பேசும் மனிதர்கள் அறியாமை எனும் புகையுள் மண்டிக் கிடப்பவர்களே என்கிறார்.

**ஆதித்தன் சந்திரன் அங்கி எண் பாலர்கள்**
**போதித்த வானொலி பொங்கிய நீர்புவி**
**வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்**
**ஓதுற்ற மாயையின் விந்துவில் உற்றதே. (397)**

அசுத்த மாயையின் காரியமாகிய மூலப்பகுதியில் காரியங்களுக்காக ஞாயிறு, திங்கள், தீ ஆகிய முச்சுடர்களும் எண்புலக் காவலர்கள் (இந்திரன், அக்னி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானர்) போதத்திற்கு வாயிலாக எழுத்து ஓசைக்கு இடமாயிருப்பது வாய். அவ்வானும் ஒளியாகிய காற்றும், பெருகும் தன்மை வாய்ந்த நீரும், நிலமும் ஆகிய பூதங்களும் அசுத்த மாயையின் காரியங்களே. அளவையால் ஆராய்ந்து முடித்தலாகிய வாதித்த சத்தாதி எனப்படும் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனப்படும் தன் மாத்திரை ஐந்தும் அதன் காரியங்களே. வாக்காதியாகிய செய்தற் கருவிகள் எனப்படும் வாய், கால், கை, எருவாய், கருவாய் எனும் ஐந்தும் அதன் காரியங்களே. மனாதிகள் எனப்படும் உட்கலனாகிய நான்கும் அதன் காரியங்களே. இவற்றை முறையே சித்தம், அகம், புத்தி இனம் பற்றிச் செவி, கண், மெய், நாக்கு, மூக்கு என்னும் அறிதல் கருவி ஐந்தும் அதன் காரியங்களே. தூமாயையின் கீழாய் அடங்கிய மூலப்பகுதியில் நின்று முறையாகத் தோன்றின மேலே கூறியவைகள். உற்றதே - திருவருள் ஆணையால் தோன்றியது.

## 10. காப்பு

**புகுந்து நின்றான் வெளியாய் இருளாகி**
**புகுந்து நின்றான் புகழ்வாய் இகழ்வாகி**
**புகுந்து நின்றான் உடலாய் உயிராகி**
**புகுந்து நின்றான் புந்தி மன்னி நின்றானே. (398)**

அங்கியாகிய மெய்யுணர்வுத் தீயினைக் கொண்டே இருட்டைச் சுட்டு ஒளியாக அருளினான். அப்படி எந்த இடத்திலும் புகுந்து நிற்கும் ஆற்றல் எப்படி இருக்க முடியும். அணுவின் அணுவினை ஆயிரம் கூறிட்டு அணுவின் அணுவினை அணுக வல்லார் அணுவினை அணுகலாம் என்று சொல்கிறார் திருமூலர். இதைக் கேட்டதும் சாதாரண நம்மைப்போன்று உருவத்தை 'நான்' என்று நம்பி ஏமாந்து இருப்பவருக்கு எப்படிப்புரியும்? நாம் ஏமாற்றப்பட்டு பொய்யினால் ஆட்சி செய்யப்படுகிறோம் என்பதை உணர்ந்தால் ஒழிய மாறமாட்டோம். இப்படி ஏமாற்றுவது எது? அதுவும் நம்மிடமே இருந்துகொண்டே, நம் உழைப்பை எல்லாம் பயன்படுத்தி, உண்டு கொழுத்து கடைசியில் நம்மையும் இருக்கும் இடம் தெரியாமல் ஆக்கி விடுகிறது மாயாசக்தி.

அப்படி என்றால் என்ன? தின்ற கொழுப்பு - தின்ற என்றால் அவசியமில்லாமல் திணிக்கப்பட்ட தீனிதான் அது. அதுதான் நம்மைத் தீயாக வேக வைக்கிறது. வெந்தது கரியாகிறது. கரி அதீதமாகி மலமாகிறது. அதுவே கரியமல வாயு. அந்த தீவனம் தீபர்வளியாகிய சுத்த உஷ்ணத்தை (பிராண சக்தியை) உள்ளே புகவிடாமல் தடுக்கிறது. அந்தத் தடை நீக்கப்படவேண்டும். அந்தக் காவல் தெய்வம் எது? அவன் சொன்னான் இவன் சொன்னான் என்று எதை எதையோ கேட்டு ஏன், எப்படி என்று கேள்வி கேட்டுத் தெளிவடையாமல் கேட்டதை, பார்த்ததை அப்படியே நம்பினால் ஏமாற்றுபவனுக்கு சுலபமாகிறது. இங்கே நாம் விழிப்படைய வேண்டும். இதற்கு உதவுவது விசாரணை. அன்னதைப் பிள்ளைகளை தத்து எடுத்து வளர்ப்பது போல "அறிவாகிய நான்" இந்த பூ உலகில் உள்ள அறியாமையில் உழலும் உயிரினங்களின் (ஆவி) உள் புகுந்து இருளால் சூழப் பட்டோம். தத்துவம் அசி என்றால் அதுவே நீ ஆனாய் என்ற முப்பதம் இதையே குறிக்கிறது. நீ என்ன நினைக்கிறாயோ அதுவாகவே நீ ஆகிறாய் என்பதுதான் பொருள். நமக்கு வரும் எண்ணங்களை விசாரணையில்லாமல் அப்படியே ஏற்றுக் கொள்வதுதான் தத்து என்று பெயர். நீ இல்லாததை உளதாக பாவித்தலே பாவம். இதுவே முதல் பிறவி. அப்படி நம்மில் புகுந்த எண்ணங்களில் சில புகழைக் கொடுத்தது. சில இகழ்ச்சி களையும் கொடுக்கும். அந்த எண்ணங்களே உடலாய் உயிராய் தோற்றம் பெற்றது. இருபதமாவது இரவும் பகலும் உருவது ஆவது உயிரும் உடலும் உயிர் இருட்டிலும் (ஆவி) உடல் ஈரப்பசை காய்ந்த ஓடு இதில் உள் இருக்கும் இடமே சிதா காயம். நம் உள்ளே உள்ள ஒளியே புத்தி (புந்தி) தங்கி நிற்கிறது. இந்த பைத்தியம் தெளிவு பெறுவதே ஞானம். பிணிக்கப்பட்டுக் கிடக்கும் ஒளியை பிரித்து அறிவதே பகுத்தறிவு. பித்தம் தெளிய மருந்தொன்று உள்ளே உண்டு. அதையே பேரின்பம் என்பது. மண்ணுதல் நிலை பெறுதல்.

**தானே திசையொடு தேவருமாய் நிற்கும்**
**தானே உடல் உயிர் தத்துவமாய் நிற்கும்**
**தானே கடல் மலை ஆதியுமாய் நிற்கும்**
**தானே உலகில் தலைவனு மாமே. (399)**

சிவனுடைய எண்ணமே இந்த உலகம். அவன் அறியா மையை தத்தெடுத்து அதை தன்னைப் போல் அறிவாகச் செயல்படுவதுதான் இயக்கம். அப்படி எல்லாவற்றிலும் புகுந்து நிற்பதே புந்தி. அப்படி அவன் எண்ணமே நாம் காணும் உலகம்: உடல், உயிர், கடல், மலை, ஆகாயம் எல்லாமே அவன்தான்.

**உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய் கார்முகில் நீர் பொழிவானாய்
இடையாய் உலப்பிலி எங்கும் தானாகி
அடையார் பெருவழி அண்ணல் நின்றானே. (400)**

முழுமுதல் விழுப் பொருளாம் சிவபெருமான் கலப்பால் உடல், உயிர், உலகமாகவும் நின்றனன். கடலாய், கடல் நீரைப் பருகி கருமுகிலாய் நின்றனன். இவை அனைத்திலும் இடையென்று சொல்லப்படும் உள்ளுறைபவனாய் நிற்பவனும் அவனே. எங்கும் தானாகி நிற்பவன் அவனே. அடியார்கள் தன்னை வந்து அடைய பெருவழியும் வகுத்துள்ளான். அதுதான் ஒலி ஒளி வழி. சம நிலையாக இருப்பது ஒளியே.

**தானொரு காலம் தனிச் சுடராய் நிற்கும்
தானொரு கால் சண்ட மாருதமாய் நிற்கும்
தானொரு காலம் தண் மழையாய் நிற்கும்
தானொரு காலத்து தண் மயனுமாமே. (401)**

சிவபெருமான் ஒரு காலத்து ஒப்பில்லாத பேரறிவு பெரும் சுடராய் நிற்பான். அப்படியே சண்டமாருதம் (புயல் காற்றாய்) குளிர்ந்த பெருமழையாய், குளிர்ந்த மாயவனுமாய் நிற்பன். தலைக்குணம் அமைதிக்குணம் - சாத்வீகக்குணம்.

**அன்பும் அறிவும் அடக்கமுமாய் நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியுமாய் நிற்கும்
முன்புறு காலமும் ஊழியுமாய் நிற்கும்
அன்புற ஐந்தில் அமர்ந்து நின்றானே. (402)**

இந்தப் பாட்டில் அன்பு நிற்கும். அதனால் இன்பம் நிற்கும். அன்பும் இன்பமும் கலந்த இடத்தில் காலமும் நிற்கும். நாம் நல்ல சுகமாய் இருக்கும் போது நேரம் போவதே தெரியாது. இதைத்தான் நல்லதிற்கு காலம் இல்லை என்பது. துன்பம் வந்த காலை ஒரு நிமிடம் ஒரு யுகமாகத் தெரியும். இன்பமோ துன்பமோ நம் மனதை பொறுத்ததே தவிர பொருள்களில் இல்லை. ஆதலால் நிற்றல் தாம் சுகம். இருப்பே சுகம். அலைதல் அல்ல. எதையும் தேடி எங்கேயும் அலைய வேண்டாம். நம்மைத் தேடி வருவதை ஏற்றுக் கொள்வோம். அதுபோதும் என்று நினைக்கின்ற மனமே பொன் செய்யும் மருந்து.

**உற்று வனைவான் அவனே உலகினை
பெற்று வனைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலும் குடமும் சிறு தூதை
மற்றும் அவனே வனைய வல்லானே. (403)**

நிலை பெறாத இந்த உலகத்தையும் உலகப் பொருள் களையும் மாயையினின்றும் படைத்து அருளினான் சிவன். அதற்குக் காரணம் வினைக்கீடாகப் பிறவியை பலவாறு படைத் தருள்பவனும் அவனே. வேறுபாடு என்பது பரு உடலைப் பொருத்ததே. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்பது ஓரறிவு முதல் ஆறு அறிவு ஈறாக உள் உடம்பு நுண்ணிய பொருள்களால் ஆனதே. அது எட்டு மூலப் பொருள்கள். யாவர்க்கும் ஒன்று போல் அமைந்த இயற்கை பிறப்புடம்பாகும். சிறப்புடம்பு நால்வகை தோற்றத்து வினைக்கீடாக அமையும். அவை வியர்வை, வித்து, முட்டை, பை என்பர். இவ்வுடம்புகள் இரு வினைக்கீடாக பல வேறு வகையாகக் கொடுக்கப்படுகின்றன. குயவன் தேவைக்கேற்றவாறு பானை, சட்டி செய்து தருவது போல அதனாலேயே உடலை கடம் என்று சொல்கிறோம். 'உ' என்ற நாதத்தோடு கூடியது. நாதத்திற்குக் காரணம் உள்ளிடம்.

**உள்உயிர்ப்பு உடலாகி நின்றான் நந்தி**
**வெள் உயிராகும் வெளியாய் நிலம் கொளி**
**உள் உயிர்க்கும் உணர்வே உடல் உட்பரம்**
**தன் உயிரா வண்ணம் தாங்கி நின்றானே. (404)**

உயிர் மூச்சாகவும், அம்மூச்சின் நிலைக்களமாக உடம் பாகவும், கலப்பு முறையில் நின்று நிறையும் பெருமை மிக்கவன் நம் தீ. மலம் நீங்கிய உயிர் வெள்ளுயிர் எனப்படும். அவ் வுயிர்க்கும் இடம் கொடுத்து வெளியாய் நிற்பவனும் சிவனே. தன்னுயிர் - பல அண்டங்களிலும் செலுத்தப்படும் உயிர்.

**தாங்கரும் தன்மையும் தானவை பல்லுயிர்**
**வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை**
**ஓங்கி எழுமைக்கும் யோகாந்தம் அவ்வழி**
**தாங்கி நின்றாலும் அத்தாரணி தானே. (405)**

இறைவன் பல் உயிர்களை வேறறக் கலந்து தாங்குவதாகிய காத்தலைப் புரியும் அரிய இயல்பு வாய்ந்தவன். அவ்வுயிர்களை பேரொடுக்க காலத்தும் காப்பதும் அவனே. மிகச் சிறந்து தோன்றும் தலைமைப் பதவியை எய்துவதற்கு செறிவு என்பது யோக நெறி. யோக வழியில் பெறப்படுவது ஞானம்-தெளிவு. யோகம் என்பது இயமம், நியமம், ஆசனம், பிராணாயமம், பிரத்தியாகரம், தாரணை, தியானம், சமாதி, தாங்க - காந்தம். அவ்வழி சிறந்த அறிவு நெறி, தாரணி - வீட்டுலகு. செறிவுநெறி - யோக நெறி, அறிவு நெறி - ஞான நெறி, ஆகவே படைத் தவன் யாரோ அவனே காப்பாற்றுகிறான் என்ற நம்பிக்கையே தெளிவு. இங்கே எனக்கு என்ன வேலை?

**அணுகினும் சேயவனும் அங்கியிற் கூடி**
**நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்**
**பணிகிலும் பார்மிசைப் பல்லுயிராகித்**
**தணிகினும் மண்ணுபல் அண்ணல் செய்வானே. (406)**

இறைவன் ஆறு உயிர்களுடன் கலப்பால் ஒன்றாய்க் கூடி இருப்பினும் அவ்வுயிர்களின் சுட்டு அறிவிற்கும் சிற்றறிவிற்கும் எட்டாத சேய்மையன். இது கற்பாரோடு கலந்து கற்பிப்பார். அரண் குறியாயினும், கற்பார் காணா அறிவார் காண். அவ் யுக்தன் உயிர்ப்பு (மூச்சு பயிற்சி - பிராணாயாமம்) மூலத் தீயுடன் ஒன்றித் திருவருளால் மேல்நோக்கிச் செல்லவேண்டும். சென்றால் திருவடி உணர்வாகிய ஞானக் கொழுந்தினை அன்புச் சிவன் நல்கி அருளுவான். பல்லுயிர்களையும் அவ்வுயிர்களுக்கேற்ற பணியில் செலுத்தி உடனாய் நிற்பினும், அவ்வுயிர்களுடன் கலந்து தங்கினும் பொருள் தன்மையால் வேறாக உள்ளவன். அவன் அருள் வழி நிற்பார்க்கு மலம் கழுவப்படும். மலம் கழுவப்படவே அவ்வுயிர் தலைமையை நோக்கிச் சென்று காயுஜ்ய பதவி அடையும். இதுவே சரணாகதி. அடுத்து, அழிப்பு என்ற தலைப்பில் பத்து பாடல்கள். அழிப்பு என்றால் இல் லாமல் ஆக்குதல் அல்ல. ஒன்றை மற்றொன்றாய் மாற்றுவதே இயக்கம். எதையும் அழிப்பது என்பது கிடையாது.

## 11. அழிப்பு

**அங்கி செய்து ஈசன் அகலிடம் சுட்டது**
**அங்கி செய்து ஈசன் அலை கடல் சுட்டது**
**அங்கி செய்து ஈசன் அசுரரை சுட்டது**
**அங்கி அவ்ஈசற்கு கை அம்பு தானே.. (407)**

சிவபெருமான் ஒன்றாக இருந்து வேறுபட்ட நிலைகளை அடைந்து அது அதுவே தன் முதலும் முடிவும் என்று கருதி அங்கு அங்கே மண்ணாகவும், நீராகவும், நெருப்பாகவும், காற்றா கவும் தேங்கி நின்றுவிட்டன. அவைகளை மறுபடியும் மாற்றி தன் உண்மையான ஒருமைப்பாட்டை அடைய வைப்பதே ஈசனின் நோக்கம். அப்படி மாற்றி அமைக்க உதவுவது நெருப்பே. அங்கியேயாம். அது மெய்யுணர்வுத் தீ. அழிக்கும் தீயல்ல. அகலிடம் என்றால் தன்னை விட்டு அகன்ற இடம். சுட்டு ஒழித்தான் இல்லை. அருளினான். அருளினன். என்பது பேரொடுக்கம் - லயமான இடம். அதுபோல் அலைகடலையும் ஒடுக்கி அருளினன். அத்தகைய அசுரரையும் ஒடுக்கி அருளினன். அத்தகைய மெய்யுணர்வு - அரும்பெரும் ஜோதியில் கதிர் வீச்சே கை அம்பாகும். இருந்த இடத்திலிருந்து ஏவப்பட்டு தொழில் முடிந்ததும் அவனிடமே திரும்பி வந்து அடைக்கல

மாகும்.

**இலயங்கள் மூன்றினும் ஒன்று கற்பாந்த**
**நிலையின்றி அழிந்தமை நின்று உணர்ந்தேன் அதனால்**
**உலை தந்த மெல்லரி போலும் உலகம்**
**மலை தந்த மானிலந்தான் வெந்ததுவே. (408)**

இலயங்கள் மூன்று - தினப்பிரளயம் - தூக்கம், கற்பந்தாப் பிரளயம் - தூங்குவது போல சாக்காடு, உலகப் பிரளயம் - உலக அழிவு. அவை நாளொடுக்கம், ஊழி ஒடுக்கம், பேரூழி ஒடுக்கம் என்பர். அவனருளால் இம்மூன்றையும் உணர்ந்தேன். உலைப்பானையிலிட்ட மெல்லிய அரிசி செவ்வியுற ஆக்கம் பெறும். அரிசி என்ற சொல்லில் அரியும் சிவனை உண்டு. அதுபோல் ஊழி முடிவில் மாயை (மான்) என்று சொல்லப்படும் மூலப் பகுதியால் தரப்படும் மண் உலகங்கள் அழியும். அவை எல்லாம் அசுத்த மாயையில் தோன்றியவை. கலையினின்றும் தோன்றுபவை. கலையை உழைப்பு மெய் என்பர். மூலப்பகுதியே முக்குணத்தின் தோற்றம். அலை காமம், மயக்கம், வெகுளி. மூன்றும் நலிவன்.

**பதம் செய்யும் பாரும் பனிவரை எட்டும்**
**உதம் செய்யும் ஏழுகடல் ஓதம் முதலாம்**
**குதம் செய்யும் அங்கி கொழுவி ஆகாசம்**
**விதம் செய்யும் நெஞ்சில் வியப்பில்லை தானே. (409)**

ஆருயிர்கள் பிறப்பற்று சிறப்புற்று என்றும் ஒளியாய் வாழ்வதற்கு துணைசெய்யும் இந்நில உலகம் பதம் செய் பார் எனப்பட்டது. அத்தகைய இவ்வுலகமும், குளிர்ந்த மேகங்கள் பெரு மலைகள் எட்டு, ஓசை எழுப்பும் ஏழு கடலும் இவற்றைக் காணும்தோறும், கேட்கும்தோறும் கேட்பிக்கும்தோறும், நுகரும் தோறும், அளவிலா மகிழ்ச்சி அனைத்துயிர்க்கும் என்றுமுளது. இவற்றை பேரொடுக்க காலத்து சிவன் சிவஞான அனல் கொழுவி ஒடுக்குவன். அவ்வொடுக்கம் சமநிலை - சம ஆதி எனப்படும். அஃதாவது உய்த்துணவார்க்கு உள்ளதாய் கட்புலனாகாததாய் இருப்பதாகும். அதுபோல் மாயா காரியமாகிய உலகம் தன் காரணமாகிய மாயையின் உள்ளதால் ஒடுங்கித் தோற்றமில்லாததாய் இருக்கும் திருவருளால் இவ்வுண்மை உணரலாகும். அங்ஙனம் உணர்ந்தார் நெஞ்சில் உலக நடவடிக்கைகள் வியப்பாகவோ, பயமாகவோ தோன்றாது.

**கொண்டல் வரை நின்று இழிந்த குலக் கொடி**
**அண்டத்துள் ஊறி இருந்து எண் திரையாகி**
**ஒன்றில் பதம் செய்த ஓம் என்று அப்புறம்**
**குண்டத்தின் மேல் அங்கி கோலிக் கொண்டானே. (410)**

திருவருளால் இயக்கப்படும் கொண்டலாகிய மழை

திருவருள் என்றே அழைக்கப்படும். வான் சிறப்பு அம்மழை குலக்கொடி என்றும் சொல்வர். எல்லோரும் ஓர்குலம் என்பது நீரைத்தான். ஒன்றாக உயர்ந்த பெருமலையினின்றும் ஆருயிர் உய்ய அருவியாக வழிந்தோடிய பெருமழை அண்டத்துள் (முட்டை வடிவில்) நிரம்பிற்று. மீண்டும் அண்டத்துள் நின்று ஊற்றெடுத்தது. கடலாய், ஆறாய், நீர் நிலைகளாக உருவாகிற்று. பொருந்தி எல்லாம் பொருள்களையும் யாவர்க்கும் பயன்படுமாறு அமைக்கப்பட்டது. அதன்மேல் புறத்து வேள்வியில் 'ஓம்' என வளர்க்கப்படும் அழல் தோன்றும். அவ்வழலை சிவன் கையில் ஏற்றுக் கொண்டான். இருந்தெண் (தெளிந்த) அலையாகி (ஆவி இருவகை ஆண் / பெண்ணதாகி) ஒன்றின் பதம் செய்து - பொருந்தி இனிய செவ்வியை உண்டாக்கி (ஒன்று + இன்பதம் = ஒன்றின்பதம்) - தலையில் கங்கையும் கையில் நெருப்பும் இருப்பது போல் சிலை வடிவில் காண்கிறோம். புனல் படைத்த வனுக்கு-ஆதி பெரும்திரு. மழுப்படையாகிய தீ அதன் வேகத் தைத் தடுப்பதற்கு நிலைப்பினைச் செய்வது பெண்பாலாகவும் நீக்கத்தை ஆண்பாலாகவும் உருவகப்படுத்தினர்.

**நித்த சங்காரம் உறக்கத்து நீண்மூடம்**
**வைத்த சங்காரமும் சாக்கிராத்த மாஞ்**
**சுத்த சங்காரம் தொழிலற்ற கேவலம்**
**உய்த்த சங்காரம் பரன் அருள் உண்மையே. (411)**

ஆருயிர்களை அருளில் செலுத்துவது ஒடுக்கம். நித்தம் தூக்கத்தில் பொழுது முடிகிறது. அதுவே சம்ஹாரம் என்பது. இருமுடி கட்டப் பட்டு மாலை போல் ஆவது ஹாரம். சம் - ஒன்றாவது. உறக்கத்தில் அறிவு அடங்கி இருத்தல். இதனை நீள் மூடம் என்பர். இதற்கு அப்பால் நிலை கனவு, தூக்கம். தியானத்தில் சாக்கிர அதீதம் என்பது துரியமும் துரியாதீதமும் அடங்கும். தூங்காமல் தூங்குவது ஆருயிர்கள் கருவிகளுடன் கூடி இருந்தும் தொழிலுறாது அறியாமையுடன் ஒட்டி நிற்கும் - தொழிலற்ற ஒடுக்க நிலை. இதுவே சுத்த சம்ஹாரம். அசுத்த மாயையின் விரிவு அனைத்தும் எண் கூற்றுப் பேரால் முடிக்கப்படும். அசுத்த மாயை முப்பத்தோறு மெய்களை உடையது (24+7=31) அவை நிலம் முதல் வான் வரை எண் கூறு. 1) பூதம் ஒன்று 2) பூதமுதல் ஒன்று (பொறி) 3) அறிதற்கருவி (புலன்) 4) செய்தற் கருவி ஒன்று (தூக்கம் - இந்திரியம்) 5) அகக் கலம் ஒன்று (அந்தக்கரணம்) 6) குணம் ஒன்று 7) மூலப்பகுதி ஒன்று 8) போர்வை ஒன்று இதையே புரிஅட்ட காயம் என்பர். போர்வை கலாதி எனப்படும். இப்பாகுபாட்டினை காரண உடம்பெனவும், பரதேகம் என்றும் கூறுவர். பரகாயப் பிரவேசம், பிறர்மனை நோக்காமை என்பது இதையே. இதை

எல்லாம் நான் அல்ல என்று தெளிந்து நிற்கும் நிலைபரன் நிலையாகும்.

**நித்த சங்காரம் இரண்டுடலை நீவுதல்**
**வைத்த சங்காரமும் மாயா சங்காரமாம்**
**சுத்த சங்காரம் மனா அதீதத் தோய்வுறல்**
**உய்த்த சங்காரம் சிவன் அருள் உண்மையே. (412)**

நாள் ஒடுக்கத்தில் நுண்ணுடல், பருஉடல் இரண்டிடத்தும் பற்றின்றி இருக்குமாறு செய்தல் ஒன்று. நீவுதல் - கடத்தல் (நீந்திக் கடப்பது) நிலைப்பித்த ஒடுக்கம் மாயை பற்றகற்றி ஒடுக்குதல் மாயா சங்காரம். ஆருயிர் தன் அளவில் நிற்கும் நிலை. சுத்த ஒடுக்கம். இது மனதுக்கு அப்பாற்பட்ட நிலை. தோய்வுறல் மனம் அகன்று நிற்றல். அருளில் ஒடுங்கல் உய்த்த சங்காரம்.

**நித்த சங்காரம் கருவிடர் நீக்கினால்**
**ஒத்த சங்காரம் உடல் உயிர் நீவுதல்**
**சுத்த சங்காரம் அதீதத்துள் தோய்வுறல்**
**உய்த்த சங்காரம் பரன் அருள் உண்மையே. (413)**

நாள் ஒடுக்கத்தில் கரு இடர் நீங்குதல் மேலானது. அது நீங்கினால் உயிர் உடலோடு கூடி வரினும் அவ்வுடலில் பற்றின்றி வாழும். ஜீவன் முக்தர் நிலை. இது தோய்வுறா நிலை. தாக்கற்று நிற்கும் நிலை. நிலைப்பிக்கும் ஒடுக்கம். அகன்ற நிலை, கழன்ற நிலை எனவும் கூறப்படும். அதன்மேல் பரன் நிலை உண்மையாகும்.

**நித்த சங்காரமும் நீடினைப் பாற்றலின்**
**வைத்த சங்காரமும் மன்னும் அனாதியில்**
**சுத்த சங்காரம் தோயாப் பரன் அருள்**
**உய்த்த சங்காரமும் நாலாம் உதிக்கிலே. (414)**

தோயாப் பரன் அருள் நீண்ட இளைப்பாறுதலே நிலைத்த ஒடுக்கம். இது பிரமாவின் முடிவாகும். இடைநிலை ஒடுக்கம். நீண்ட ஒடுக்கமாகும். இடைநிலை - யுகப் பெயர்ச்சி. சுத்த சங்காரம் - மாறா ஒடுக்கமாகும். திருவடியில் கூடுதல் நாலாம் நிலை.

**பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்**
**பாழாய் அடங்கினும் பண்டைப் பாழ் பாழாகா**
**வாழாச் சங்காரத்தின் மாலயன் செய்தியாம்**
**பாழாம் பயிராய் அடங்கும் அப்பாழிலே. (415)**

பாழாகிய குணம் குறியற்ற வினையில் நீங்கி விளங்கிய அறிவினையுடைய உண்மை அறிவு இன்ப வடிவினன் சிவன். அவனை வினை முதலாகக் கொண்டு மாயா காரியமாகத் தோன்றியது இவ்வுலகம். இவ்வுலகத்தில் தோன்றின எல்லாம்

உலகு உடல்களைக் கடந்து வெட்டவெளியில் ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கினும் அப்பாழ் - பண்டைப் பாழாகா. பண்டைப் பாழ் என்பது மாயைக்கு முன் இருந்த முதல்நிலை வந்ததும் போவதும் மாயை தானே தவிர முதல்நிலை எப்போதும் முதலாகவே உள்ளது. அது பிறக்கவும் இல்லை சாகவும் இல்லை.

**தீயவை தார்மின்கள் சேரும் வினைதனை**
**மாய வைத்தான் வைத்தவன் பதி ஒன்றுண்டு**
**காயம் வைத்தான் கலந்து எங்கும் நினைப்பதோர்**
**ஆயம் வைத்தான் உணர் வார வைத்தானே. (416)**

எஞ்சு வினை என்பது நிறைவு பெறாத எண்ணங்கள். அவைகளை அறிவாய் எரித்துவிட வேண்டும். ஊழ்வினை என்பது காலத்துக்குட்பட்ட செயல்கள். இதை இடையறா திருவடி நினைவால் சுட்டு எரிக்கலாம். குளிருக்கு, குளிர் தாங்கும் போர்வை இருந்தால் குளிர் பாதிக்காது. அதுபோல் திருவடி நினைவு மெய்யுணர்வு. அந்த நினைவே சூடாகி மாயையாகிய மூடு பனியை அழிக்கும். உள்ளம் சிவன் நினைவில் (எத்தொழில் செய்தாலும் ஏது அவத்தைப் பட்டாலும் முத்தர்மனம் இருக்குமே மோனத்தே) சேரும் வினை - ஆகா மியம் - ஆர்மின் - ஊழ் வினைமையங்கள். மாய - பதி ஒன்று - புருவ மத்தி, ஆயம் - சிவ சக்தி சேருமிடம் ஆ கா யம் - காற்றும்கூட போக முடியாத இடம்.

## 12. மறைப்பு

**உள்ளத்து ஒருவனை உள்ளுறு சோதியை**
**உள்ளம் விட்டு ஓரடி நீங்கா ஒருவனை**
**உள்ளமும் தானும் உடனே இருக்கினும்**
**உள்ளம் அவனை உரு அறியாதே. (417)**

சிவபெருமான் உண்மை நிலையினை அறிய முயற்சித்தால் நாமும் அவன் ஆனால் ஒழிய அறிய முடியாது. நீயும் அவனாகி விட்டால் வேறு ஒருபொருள் கிடையாது. எல்லாம் அவனாயிருக்கும் போது ஏது வேறு பொருள். தனக்கு உவமை இல்லாதவர். அதுவே நீயாக இருக்கிறாய் என்ற தெளிவு ஏற்பட்டபின் எங்கே என்று தேடுவாய்? உள்ளமே அவன்தான். எதை எதை பார்க்கிறாயோ அவை எல்லாம் அதுவே. அதையே வெளி என்பது. சுத்த வெளி.

**இன்பம் பிறவி படைத்த இறைவனும்**
**துன்பம் செய் பாசத் துயருள் அடைத்தனன்**
**என்பிற் கொழுவி இசைந்துறு தோல் தசை**
**முன்பிற் தொழுவி முடிகுவதாமே. (418)**

படைப்புக் கடவுளுக்கு அதிகாரம் கொடுத்து நான் நினைப்பது போல உலகத்தை சமநிலையில் படை என்று உத்தரவிட பிரமன் நேர் எதிரிடையாக வேறு வேறு உருவங் களை படைத்து, ஆறு இனங்களாக்கி, எட்டு நிலைகளுடன் படைத்தான். அதனாலேயே அவனை தெய்வ நிலை என்ற தலைமைப் பதவி பறிக்கப்பட்டது. இது பிரமன் தலையைக் கொய்ததாக உருவகத்தில் கதை திரிக்கப் படுகிறது. ஆகவே, பிரமன் படைப்பு என்பது நம்மிடம் எலும்பு, நரம்பு, தோல், தசை, ரோமம் போன்ற இவையெல்லாம் குறிப்பிட்ட காலமே இருக்கும். பின் மண்ணிலிருந்து வந்தது மண்ணோடு போகும்.

**இறையவன் மாதவன் இன்பம் படைத்த**
**மறையவன் மூவரும் வந்து உடன் கூடி**
**இறையவன் செய்த இரும் பொறியாகி கை**
**மறையவன் வைத்த பரிசறியாதே. (419)**

படைக்கப்பட்ட பொருள்களுக்கு, தான் ஏன் படைக்கப் பட்டோம் என்றே தெரியாது. ஆகையால் 'நான்' ஏன் பிறந்தேன் என்ற கேள்விக்கு நாம் பதில் பெற முடியாது. ஆகையால் தூர் தரிசனம், வானொலி நிகழ்ச்சிகளில் (நேருக்கு நேர்) இதுவாக உங்களுக்கு எப்படித் தோன்றிற்று (Inspiration) என்று கேள்வி கேட்பார்கள். இதற்கு உண்மை சொல்பவராக இருந்தால் "எனக்குத் தெரியாது, ஆண்டவன் செயல் என்று சொல்ல உண்மை பேசுகிறார்கள் என்று பொருள். ஆனால் தன் முயற்சியால் வந்தேன் என்று சொன்னால் அது அகம் பாவப் பேச்சு. அவன் மண்டை தட்டப்படும் இயற்கையால் நாம் படைக்கப்பட்ட பொருள்களே ஒழிய நாம் நம்மை படைத்துக் கொள்ளவில்லை. அப்படி ஆற்றல் இருந்தால் ஒரு உரோமம் செய்யுங்களேன் பார்ப்போம். அப்படி நாம் செய்யாத, செய்ய முடியாத செயல்களை, நான் செய்தேன் என்று சொல்வதற்குப் பெயரே ஆணவம், அறியாமை, பாவம் என்பது. இதை உணர்ந்தவர்களிடம் நான், எனது என்ற கர்வமே இருக்காது.

துடைத்தலை செய்யும் இறையவன் அரன், காத்தலைச் செய்யும் மாதவன் அரி, படைப்பைச் செய்யும் மறையவனாகிய அயனும் முழுமுதல் சிவன் படைத்தருளிய, சிறந்த பொறிகளால் அமைந்த உடலில் வந்து கூடினர். சிவபெருமான் குறிப்பினை இம்முத்தேவரும் அறியார்கள்.

**காண்கின்ற கண் ஒளி காதல் செய்து ஈசனை**
**ஆண், பெண் அலி ரூபமாய் நின்ற ஆதி யை**
**ஊண் படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டு**
**சேண் படு பொய்கைச் செயல் அணையாரே. (420)**

(சிவன் தன்னைக் காண கண் அருளினான். நாம் அவனைத் தவிர எல்லாவற்றையும் பார்க்கிறோம்.) தானும் ஆண் (நெருப்பும், காற்றும்) பெண் (நீரும், மண்ணும்), அலி - மனம் - அரு உரு. இது நம் தமிழ் மொழியில் உயிர் எழுத்து பன்னிரெண்டில் - 9-வது எழுத்து (ஐ) ஆண் - 4 எழுத்து, பெண் - 4 இரண்டும் சேர்ந்த இடம் (ஐ) அதேபோல் ஒளி, ஒலி (ஒ, ஓ) சேருமிடம் 'ஔ' எனும் பழமையான கிழ்வி சக்தி - அரு உரு. நாக்கு நமக்கு கொடுத்தது உண்டு மகிழ மட்டும் அல்ல. தூய நினை வினை சுவைத்து அவன் நாமம் "சிவ சிவ" என்று சொல்லவே அளிக்கப்பட்டது. அத்த கைய உணவினை உண்ட நெஞ்சமே நன்னெஞ்சம் ஆகும். அத்தகையோர் திருவருளால் சிவனை உணர்வார். நாவு எல்லாம் இனிக்கும். உணரவே பிணிப்புக்கள் எல்லாம் தொலைவில் அகன்று விடும். நிலை இல்லாத உலக நிகழ்ச்சிகள் அவர்களால் பாதிக்காது. கண்ணால் காணவேண்டிய ஒளியைக் காணவும் சொல்லால் அவன் நாமம் சொல்லவும் நெஞ்சால் அவனையே நினையுங்கள்.

**தெருளும் உலகிற்கும் தேவர்க்கும் இன்பம்**
**அருளும் வகை செய்யும் ஆதிப் பிரானுஞ்**
**சுருளும் சுடர் உறு தூவெண் சுடரும்**
**இருளும் அறகின்றி ருட்டறை யாமே. (421)**

திருவருளால் தெளிவடைந்த ஜீவன் முக்தர்களுக்கு சிவலோகத் தேவர்க்கும் இன்பத்தினை அருளும் வகை செய்து அளிப்பன் அம்மை அப்பராகிய சிவபெருமான். இருள் அறை, உள்ளொளி பெற்று ஒளி அறையாகும். உள்ளும் வெளியும் ஒன்றாகும். வளர்தலும் தளர்தலும் ஆன தன்மை சுருள் எனப்படும். அத்தகைய தன்மையுடையது மனம் (திங்கள் - சந்திரன்) அதீத சுடரொடு கூடியது சூரியன் அறிவு ஒளி, தூய வெப்பமான அக்னியும் (உடல்) இவற்றால் போக்கப்படும். சமநிலை ஏற்படும் சம + ஆதி.

**அரைக்கின்ற அருள் தரும் அங்கங்கள் ஓசை**
**உரைக்கின்ற ஆசையும் ஒன்றோடு ஒன்று ஒவ்வா**
**பரக்கும் உருவமும் பார் அகந்தானாய்**
**கரக்கின்றவை செய்த காண்தகையானே. (422)**

நடப்பாற்றலாகிய ஆதி வினைக்கு ஈடாக துன்புறுத்தும் அருள் என்பர். இன்பம் தரும் அருள் போன்றதே துன்பம் தருவதும் அருளே. ஆனால் இன்பமும் துன்பமும் அறியாதது அருள். அதுவும் ஒரு கருவிதான். தனக்கு அளிக்கப்பட்ட கர்மத்தை அதாவது அறைக்கும் தொழில் - நுண்ணியமாக்கும் அங்கங்கள் நம்மிடம் எட்டு உண்டு. அப்படி அறைக்கும்போது வரும் ஓசையே ஓம் என்ற பிரணவம். அவ்வருள் மாயா

காரியமாக படைக்கும் பொருள். இவற்றை நுண்மை எனவும், பூதங்களின் முதல்நிலை, தன்மாத்திரை எனவும் கூறுவர். அவற்றுள் ஓசை, ஒளி, சுவை, ஊறு, நாற்றம் என்னும் ஐந்தும் புலப்படும் புலன் அறிவு இவை இரண்டும் புலன் கொளி என்று சொல்லப்படும். புலனாகிய பொருளுடன் கலந்து கொண்டு ஏற்று, தான் பொன் போல் காட்டுவது (GILT) (முலாம் பூசப்பட்டதுபோல) அவ்வாறு இருக்க அவாவினை ஊட்டுவது மனம். என்வே ஐம்புலன் கொளியும் மனமும் ஒன்றோடு ஒன்று ஒவ்வாத உருவமாக பரந்திருக்கும் இவை அனைத்தும் தொழில் படுத்தும் ஆதி அருள் இவற்றுடன் கலந்து மறைந்து நின்று அருள் புரியும்.

**ஒளித்து வைத்தேன் உள் உறவு உணர்ந்து ஈசனை**
**வெளிப்பட்டு நின்று அருள் செய்திடும் மீண்டே**
**களிப்பொடும் காதன்மை என்னும் பெருமை**
**வெளிப்பட்டு இறைஞ்சினும் வேட்சி யுமாமே. (423)**

சிறை வாசத்திலேயே பழக்கப்பட்ட கைதி, அதுவே சுகமென்று வெளிவர விரும்பமாட்டான். அதுபோல் உள்நின்ற அருள் சக்தி வெளி வாயிலை திறந்து விட்டாலும் மறுபடியும் உள்ளே வரவே விரும்புவான் - வேட்சியுமாமே வேட்கை. ஆனால் அந்த வேட்கையை ஒழிக்க அறவுரை அறிவுரையே பயன்படும். திருவடி உணர்வே அதற்குத்துணை. திருமுறை வழியாகத் தொழுதல் வேண்டும். அகவழிபாடு அறிவிற்கு அறிவாய் விளங்கும். அவனை - கடவுள் என்றால் புறத்தில் காணும் கோயில்களோ, குளங்களோ இல்லை. ஆதி என்பது அணுவை ஆயிரம் கூறிட்டது போல் உள்ளது. அதை அடைய அதே உருக்கொண்ட ஜீவனால்தான் முடியும். சீவனே சிவ லிங்கம் - கல்லால், கட்டையால் ஆனது அல்ல. ஜீவனை வீணாக்காமல் ஜீவனிடம் கருணை காட்டு. அதை பெண் இன்பத்தை நாடி வீண் அடிக்காதே என்பதே அறவுரை. இதை மக்களிடம் சொல்லத் துணிவு வேண்டும். இதையே சன்மார்க் கத்தின் துணிவு என்றார். கல்யாணம் செய். குழந்தையைப் பெறு என்று எந்த சாத்திரமும் சொல்லவில்லை. இப்படிச் சொல்லாமல் இருப்பதே மறை பொருள்.

**ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தன்**
**இருங்கரை மேலிருந்து இன்புற நாடி**
**வரும்கரை ஒரா வகையினில் கங்கை**
**அருங்கரை பேணில் அழுக்கற லாமே. (424)**

பாசம் வேறு அன்பு வேறு என்று சொல்ல முடியாத அளவில் குழப்பத்தை கொடுக்கும். அன்பு சமநிலை. பாசம் என்பது குறிப்பிட்ட ஒரு பொருளை யான் எனது என்று

உரிமை வைப்பது. இவை இரண்டிலும் கலந்து நிற்பவன் சிவன். அவன் சார்ந்தார் அனைவரையும் காத்தருளும் தன்மை யன். அத் தலை ஆய பேரறிவு பொருள் சிவன் நிலைபேற்றை அழிப்பவன் அதை இருங்கரை (இரும்புணர்வு) எனப்படும். அப்புகலிடத்து உறைந்து பேரின்பம் துய்க்க நாடுங்கள். அங்ஙனம் நாடுவதால் எல்லையின்றி வரும் பிறவிக் கடலை எண்ணிப் பார்ப்பதற்கே இடம் இல்லாமல் போகும். மல அழுக்கு முதல் எல்லா அழுக்கும் அறும். அதை னுல் மகன் (கண் + புகை) ஏற்றருளினன்.

**மண் ஒன்றுதான் பல நற்கலம் ஆயிடும்**
**உள் நின்ற யோனிகட்கெல்லாம் ஒருவனே**
**கண் ஒன்றுதான் பலகாணும் தனைக்காண**
**அண்ணலும் இவ்வண்ணமாகி நின்றானே. (425)**

குயவன் படைக்கும் கடவுள் நான்முகன். நம்மிடம் மனம் மண் என்பது வெளிநிலை. நம்மிடம் மன் மனம். மன் மனம் எங்கு உண்டு அங்கு வாய்வு உண்டு. அகம் தூய்மை வாய்மையால் வரும். யோனிகள் என்பது உருவம் அமைக்க ஏற்பட்ட குகை போன்றது. (Mould) 'அச்சு எழுத்து' போன்றது. அதையே சிதாகாயம் என்பது. நம் கண்ணில் உள்ள குகை போன்ற இடமே எண்ணம். கருவாகி உருவாகி படமாகும் இடம். காணாத கண் ஒளி படலமாயிற்று. ஆகவே நம் கண்களை நாம் எப்படி பார்ப்பது? பார்த்தது கண் அல்ல. பெரும் கண்ணான ஒளி. கண்ட அத்தைக் கொண்டு கர்மத்தை முடித்தவர் பிண் டத்தில் வாரார். பார்த்ததை பார்த்திடில் பார்வை ஊடு அறுந்திடும். ஊடு என்பது மனம். கால் மேல் எழுந்து நாலு கட்டு அறுப்பீரேல் பாலனுமாகலாம். (ஒளி) பரப்பிரம்மமும் ஆகலாம். இதை எல்லாம் இயற்கை வழியில் சிந்தியுங்கள். சிந்தனையே சித்தம். சித்தமே சிந்தாமணி - கண்மணி.

## 13, அருளல்

**எட்டுத் திசையும் எறிகின்ற காற்றோடு**
**வட்டத் திரை அனல் மாநிலம் ஆகாயம்**
**ஒட்டி உயிர்நிலை என்னும் இக்காயப்பை**
**கட்டி அவிழ்ப்பன் கண்ணுதல் காணுமே. (426)**

எண் புலமாகிய எட்டுத் திசைகளிலும் ஆருயிர்களுக்கு இன்பம் எய்துதற்பொருட்டு வழங்குவது வளி (வாய்வு). அது வீசும் காற்று எனப்பட்டது. அது மேல் (ஆகாயம்) கீழ் (மாநிலம்) மாக சக்கரம் போல் சுழன்று அடிக்கிறது. அது அலை அலை யாக வந்து மண்ணை ஒரு பக்கமும் தெளிவான ஆவியை

மேகமாகவும் ஆக்குகிறது. அதை ஒட்டி சின்னச்சின்ன வட்டத் துக்குள் அமையும் ஆவியே உயிர் என்று சொல்வது. ஈரப்பசை யுடன் இருப்பது. அது காய்ந்து போனபோது மேல் மூடியாகிறது. ஆருயிர்க்கு வினைக் கீடாக இவ்வுடல்களை படைத்து, கருவினை (உள்வினை, உடல்வினை) அருளால் கட்டிப் பிணைத்து அமைப் பவன் சிவன். இருவினை ஒப்பு உற்ற காலத்து அப்பெரும் கட்டினை அவிழ்த்து அருள்பவன் அவனே. அவன் அருள் வடிவாம் நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமான். அப்படி யானால் நெற்றிக் கண் திறந்தவர்கள் யாவருமே சிவநிலையை அடைந்தவரே. ஆனால் அந்த நிலை அடைய யோகநெறி கடைப்பிடித்தல் வேண்டும். நாலு கட்டு விடுபடல் வேண்டும். கட்டி நிற்பதுதான் கிரந்திகள். (Glands)

**உச்சியில் ஓங்கி ஒளி திகழ் நாதத்தை**
**நச்சியே இன்பம் கொள்வார்க்கு நமன் இல்லை**
**விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்கு**
**தச்சும் அவனே சமைக்க வல்லானே. (427)**

தத்துவம் முப்பத்தாறில் முடிந்த முடிவாக விளங்கும் முப்பத்தாறாம் மெய் ஒலி தத்துவம். அஃது ஒளி வண்ணமாக இருக்கும். அது மெய்களின் உச்சியில் சிறந்திருக்கும். அதுதான் எவரெஸ்ட் சிகரம். 29,000 அடி. நம்மிடம் இருபத்து ஏழு தத்துவத்தின் உச்சி. அதுதான் உச்சக்கட்டம். (Climax) துவாத சாந்த நிலை. இதனை கண்டவர், கேட்டவருக்கு பிறப்பில்லை. அதனால் கூற்றுவனுக்கும் வேலை இல்லை. இந்நிலையை பரநாதம் என்பர். நச்சி - விரும்பி, தச்சு - மூன்றையும் ஒன்றாக்குபவன். விச்சும் - விஞ்சும் எல்லாம் கடந்த மேல்நிலை. சுடர் மூன்று சூரியன், சந்திரன், அக்னி.

**குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணை**
**குசவன் மனதுற்றது எல்லாம் வனைவன்**
**குசவனைப் போல் எங்கள் நந்தி வேண்டில்**
**அசைவில் உலகம் அது இதுவாமே. (428)**

ஒரு குயவன் பல மண் பாத்திரங்கள் திரிகையில் பச்சை மண்ணால் உருவாக்குவது தன் பொருட்டு அல்ல. அதுபோல கடவுள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில்களும் ஆருயிர்களின் பொருட்டே. அதுபோல் நம் செயல்களும் பிறருக்கான பணியாகவே இருக்க வேண்டும்.

**விடையுடையான் விதிர்தன் தன் மிகு பூதப்**
**படையுடையான் பரிசே உலகு ஆக்கும்**
**கொடையுடையான் குணம் எண் குணமாகும்**
**சடையுடையான் சிந்தை சார்ந்து நின்றானே. (429)**

கானம் (காற்று) ஐந்து = காளை எனவாயிற்று. இதைக் காளைமாடு என்று உருவகப்படுத்தி பொருள் காணுகிறோம். இந்தக் காற்றை வாஹனமாகவும், கொடியாகவும் உடையவன் சிவன். ஒருவரால் படைக்கப்படாததே திருஅருள். எந்தவித குணமும், குறிக்கோளும் அற்று தானே தான் விரும்பியபடி எங்கும் செறியும் பரசிவம். அதை ஆருயிர்கள் உய்யும் பரிசாக உலகு, உடல்களை படைத்தருளும் கொடை உடையான். எட்டு வான் அருட்குணத்தை உடையவன். எட்டுக் குணத்தையும் பின்னல் சடையாகக் கொண்டவன் - நம் மூளைப்பகுதி. பின்னல் - புணர்ப்பு. அத்துவிதம். எண்ணத் தொகுப்பு - மனம். (Memory Bank)

**உகந்து நின்றே படைத்தான் உலகேழும்**
**உகந்து நின்றே படைத்தான் பல ஊழி**
**உகந்து நின்றே படைத்தான் ஐந்து பூதம்**
**உகந்து நின்றே உயிர் ஊன் படைத்தானே. (430)**

உகப்பு - உயர்வு, சிவன் உவப்பே உயர்வு. உயர்ந்து நின்றே ஏழு சப்த உலகம், காலம், ஐம்பூதம், ஊண் உடல், உயிர் (ஏழு வகைத் தீவுகள்) ஆருயிர்கள் உயர உவந்து அளித்த பரிசு.

**படைத்து உடையான் பண்டு உலகங்கள் ஏழும்**
**படைத்து உடையான் பல தேவரை முன்னே**
**படைத்து உடையான் பல சிவரை முன்னே**
**படைத்து உடையான் பரமாக நின்றானே. (431)**

முதலாவதாக - கல்தோன்றா மண்தோன்றாக் காலம் - பண்டை காலத்தே முழுமுதல் இறைவன் ஆருயிர்கள் உய்வதன் பொருட்டு, உடல்கலன், உலகம், உணவு முதலியவற்றை மாயை யினின்றும் படைத்து உயிர்களுடன் பொருந்தி அருளினான் இதுவே படைப்பு. உயிர்கள் என்றும் உள்ளன. படைக்கப்பட்டன அல்ல. அவற்றில் இருமலம் குறைந்தவர்கள் தேவர்கள். இவர்கள் பிறவியிலேயே தேவர்கள் ஆவார்கள். இந்த நிலையில் மக்களில் பிறந்தவர்களும் உண்டு. அவர்கள் மக்களுக்கு வழிகாட்டவே படைக்கப்பட்டவர்கள் அதுபோல் பல சீவர்களாகிய உயிர்களுக்கு உடல் முதலியவற்றை படைத்து அருளினான். எல்லாவற்றிலும் கலந்தும் கடந்தும் நிற்பவன். கலப்பு நிலையில் இறைவன், கடந்த நிலையில் பரமன், பரம் - மேல். விழுப்பொருள்.

**ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதம்**
**ஆதி படைத்தனன் ஆசில் பல் ஊழி**
**ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை**
**ஆதி படைத்தவை தாங்கி நின்றானே. (432)**

(எல்லாவற்றிற்கும் காரணமானவன் ஆதி) ஆதி என்றால்

எப்படி இருக்கும் என்பதை அடிக்கடி ஆராய்ந்துள்ளோம். அது அநேகமாக ஒன்றும் இல்லாத சுத்த வெளியே. அதனுடைய படைப்பே ஐந்து பூதங்கள். பௌதிக கூட்டினால் ஏற்பட்ட கலப்படமே பூத அணுக்கள். அப்படி ஒன்றை மாற்றி ஒன்றோடு சேர்வதால் நிற வேறுபாடு உண்டாயிற்று. அது சாயம். சாயை எனப்படும். நிழல் எனவும் சொல்லலாம். வேதியல் (Chemical Change) என்றும் சொல்லலாம். பருப்பொருள் தோற்றம் (Physics) இது எல்லாம் மாறக்கூடியது மாயை. இப்படி எல்லாம் மூலப்பொருளை மாற்றிப் பார்க்க ஏற்பட்ட எண்ணமே நினைவு. அதுதான் பொழுதுபோக்கு. ஊழி - காலம் எனப்படும். காலம் ஒன்றுதான் அதை போக வரச் செய்வது இந்த விளை யாட்டு புத்திதான். விளையாட்டை விளையாட்டாகவே புரிந்து கொண்டவர்களுக்கு பிரச்னை இல்லை. ஆனால் இதை உண்மை என்று நம்புகிறவர்களுக்கு வினையாகிறது. உண்மையிலே அப்பா, அம்மா, அண்ணன், தம்பி என்று நாம் நினைப்பதே கற்பனை. இதில் எதுவுமே உண்மை இல்லை. இந்த எட்டு மூலப்பொருள் களின் மாறுபட்ட தோற்றமே நாம் காணும் காட்சி. காற்றின் மாறுபட்டதே நம் பேச்சும் மூச்சும். இதையெல்லாம் அனு பவிக்கும் அறிவை யாரும் காட்ட முடியாது. காணவும் முடியாது. ஏனெனில் அதுவே நீயாக இருக்கிறாய். உணர்வுகளே நம்மால் காட்டமுடியாது. அதை அனுபவிக்கும் உணர்வு கண்ணுக்குத் தெரியுமா? இதை ஆழ்ந்து சிந்தியுங்கள். சித்தமே சிந்தாமணி.

**அகன்றான் அகலிடம் ஏழும் ஒன்றாகி**
**இவன்தான் என நின்ற எளினும் அல்லன்**
**சிவன்தான் பல பல சீவனும் ஆகி**
**நவின்றான் உலகுறு நம்பனுமாமே. (433)**

அகலுதல் - செறிதல். பரந்து எழும் ஒன்றாகி நீக்கமற நின்றான். இறைவன் அப்படி கலந்து நிற்பினும் இவன்தான் இறைவன் என்று சுட்டி உணர்த்தமுடியாது. அத்துணை எளியனு மல்லன். அதுபோல் கலப்பினால் ஆருயிர்களுடன் ஒன்றாகி நீக்கமற நிற்கின்றான். அதனால் பல பல சீவனும் என்றார். அவனே சிவகுருவாய் வந்தருளி அறியும் வழி வகைகளை நவின்றருளினான். நம்பன் சிவபெருமான். நம்பிக்கைக்கு முழு உரிமை வாய்ந்தவன் நம்பன்.

**உள் நின்ற சோதி உற நின்ற ஓருடல்**
**விண் நின்று அமரர் விரும்பும் விழுப்பொருள்**
**மண் நின்ற வானோர் புகழ் திரு மேனியன்**
**கண்ணின்ற மாமணி மாபோத மாமே. (434)**

எப்படி இந்த சூரியனும், சூழ் ஒளியும் இந்த உலகத் தோற்றத்துக்கு காரணமோ அதுபோல் நம் கண்ணும் கண்ணின்

ஒளியும் உடல் தோற்றத்துக்கு காரணம். ஆகையால் விண்ணில் உள்ள தேவர்களும் விரும்பும் ஜோதியாய் உள்ளது. மண்ணில் பிறந்த தேவர்களும் புகழும் திருமேனியன். அவனே கண்ணில் நிற்கும் கண்மணியே அது. மாமணி. புகுந்து நிற்கும் புந்தி.

**ஆரும் அறியாத அண்டத் திருவுருவம்**
**பார்முதலாகப் பயிலும் கடத்திலே**
**நீரினில் பால் போல் நிற்கின்ற நேர்மையை**
**சோராமற் காணும் சுகம் அறிந்தேனே. (435)**

மக்கள், தேவர், மூவர் முதலிய யாவராலும் அறியவொண்ணாத அண்டத் திருவுருவை உடையவன் சிவன். ஆனால் தன்னைப் பற்றி விசாரணையில் இறங்கினால் அறிய இயலும். எப்படி நம் அன்றாட வாழ்க்கையில் உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களுடனும் தொடர்பு வைக்கிறோம் என்பதை சிந்தித்தால் புரியும். சாப்பிடும் ஆகாரத்தை எடுத்துக் கொண்டால் பூமியில் எல்லாப் பாகமும் புரியும். அரிசி - ஓர் இடம், எண்ணெய் - விருதுநகர், பருப்பு - கடலூர், பால் பக்கத்துக் கிராமம், வெண்ணெய் - கடலூர், வெல்லம் - புகளூர், காஞ்சிபுரம் பட்டு, உல்லன் காஷ்மீர், பஞ்சு, பருத்தி நெல்லை மாவட்டம், உப்பு தூத்துக்குடி. இப்படியே ஜப்பானில் செய்த மின் சாதனங்கள், அமெரிக்கா, இங்கிலாந்து ஏனைய எல்லா நாட்டுடனும் தொடர்பு இருந்தே ஆகும். தூரதரிசனமும், வானொலியும் உலகத்தையே நம்மிடம் ஒளி, ஒலி மூலம் தொடர்பு. இதேபோல் ஆகாயப் பொருள்கள் சூரியன், சந்திரன், நக்ஷத்திரம், மழை, காற்று, சூழ் ஒளி சொல்லிக்கொண்டே போகலாம். இவைகளில் கலப்படமே நாம். யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பது புரியும். இவையெல்லாம் நம்மை ஆளாக்குகிறது. இவைகளுக்கெல்லாம் தலை சிவனேயாம்.

## 14. கரு உற்பத்தி

**ஆக்கு கின்றான் முன்பிரிந்த இருபத்தஞ்சு**
**ஆக்கு கின்றான் அவன் ஆதி எம் ஆருயிர்**
**ஆக்கு கின்றான் கர்ப்பக் கோளகை உள்இருந்து**
**ஆக்கு கின்றான் அவன் ஆவதறிந்தே. (436)**

உயிர்கள் (ஆவி) இறந்தபின் அதன்முன் பழக்க வழக்கத்தைப் பொருத்து அச்சு மாறிப் பிறக்கும். அச்சு என்பது குழி போன்றிருக்கும். இப்பொழுது நான் எழுதும் பேனாவில் மை உண்டு. அது மைக் கூட்டில் இருக்கும்போது மைக்கூடு போல் உருவம். பேனாவில் வந்தபோது பேனா போல் உருவம். அது எழுத்தாகும் போது எழுதுவோன் இஷ்டம். மை நான் தமிழ் தான் எழுதுவேன் என்று சொல்லமுடியாது. நான் எழுதும்போது

இந்தத்தாளில் இடம் வெற்றிடம். அது நீல மையால் எழுச்சிப் பெற்று எழுத்தாயிற்று. இது எழுச்சி. இது அச்சானால் எத்தனை ஆயிரம் பேர் படிக்கிறார்கள். அது தொடர்பு (Link). அதுவே லிங்கம். அக்னியால் தொடர்பு ஏற்பட அது சிவலிங்கம். பரு உடம்பு அப்படி எழுச்சிதான். பரு உடம்பு ஆண் பெண்ணாக உரு மாறலாம். அம்மட்டோ? அஃறிணை, உயர் திணையாகவும் மாறலாம். இவ்வகை மாறுதல்கள் பொருளின் இஷ்டமல்ல. அதைக் கையாளுபவன் இஷ்டம். அதையே அறிவு என்கிறோம். அது உடலில் புகுந்து ஓசை, உணர்வு, ஒளி, சுவை, நாற்றம் என்ற ஐந்து, மனம், எழுச்சி, இறுப்பு என்ற எட்டும் கூடி வடிவாகிறது. அதுவே முகம் முப்பது. அது உடலில் அறுபது ஆகிறது. இந்த ௬௦-ம் ஆறு ஆதாரம் ஆகிறது. இருபத்து ஐந்து ((24-ம் + 1-ம்) பூதம் - 5, புலன் - 5, ஞானேந்திரியம் - 5, கர்மேந்திரியம் - 5, கரணம் - மனம், புத்தி, சித்தம், அகம் ஆக - 4. புகுந்து உருவுடன் இருக்கும் அறிவு - புருடன் - ஒன்று (Molecules 23 + 2 = 25)

**அறிகின்ற மூலத்தின் மேல் அங்கி, அப்புச்**
**செறிகின்ற ஞானத்து செந்தாள் கொளுவிப்**
**பொறை நின்ற இன்னுயிர் போந்துற நாடிப்**
**பறிகின்ற பத்து எனும் பாரம் செய்தானே. (437)**

நுண் உணர்வால் அறியப்படுகின்ற மூலாதரத்துக்கு மேல் அகலத்தீயும் நீரும் நிறைந்துள்ள கருப்பையில் அறிவோடு கூடிய ஆருயிர் தங்கிய கருவுடன் செவ்விய இளம் காலை முடக்கி தலையுடன் சேர்ந்து 'ஓம்' வடிவமாய் அமைக்கின்றனர். கருப்பையில் சுமையாக நின்ற அவ்வுயிர் வெளிப்போகுமாறு திருவுளம் கொண்டு முந்தித் தவம் கிடந்து தாங்கிய அன்னை வயிற்றில் முந்நூறு நாளாகிய பத்து மாதமும் நீங்கும் சுமையாக வைத்தருளினன். பறிகின்ற - நீங்குகின்ற - பாரம் - சுமை, அங்கி - அப்பு - உதராக்கினியும், நீரும் - செந்தாள் கொழுவி - சிவந்த பாதங்களை மடக்கி ஒடுக்கி, 'ஓம்' துரை - பிரணவக் கரை, பத்து - பத்து மாதம்.

இது முகத்தில் 30-ம் உடலில் 300 முதல் - 3 முதல் - 3, நெருப்பு, நீர், ஆகாய அணுத்தத்துவம். 30 சப்தம் - 7 நிறம் - 7 காற்று - 10, நாவில் ருஜி-6 30X10=300 அது காற்றின் செயல். காயமே காற்றடைத்த பை.

**இன்புறு காலத்து இருவர் முன்பு ஊறிய**
**துன்புறு பாசத்து உயர்மனை வானுளன்**
**பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்**
**அன்புறு காலத்தமைத் தொழிந் தானே. (438)**

இன்பம் என்ற சொல் இச்சை (ஆசை) நிறைவு பெறும்

போது ஏற்படும் ஒரு சுக உணர்வு. இது இருவர் கூடுவதால் ஏற்படுவதால் ஏற்படுவது. இருவர் என்றால் ஒரே இனத்தில் இருவர் அல்ல. ஆண் பெண் என்ற இருவரே இருவர் எனப் பட்டது. பெண் என்பவள் இடமாக இருப்பவள். ஆண் என்பவன் உள் செல்பவன். எதையும் க்ஷேமிக்கத் தெரியாதவன். பெண் பேணிக் காப்பவள். அதனால் இதை மனை அறம் என்றனர். இவை இரண்டும் இணையும்போது அந்த இல்லம் சிறப்புறும். தேடுவதற்கும் ஈட்டுவதற்கும் ஆண், அதை க்ஷேமித்து அளவோடு செலவு செய்து மீத்து வைத்து செலவு செய்பவள் நல்ல பெண். கடவுள் வழி அன்பு வழி. அதைப் பின்பற்றி வாழ்க்கை அமையுமானால் இல்லறம் நல்லறமே. ஆனால் நாம் காணும் உலகில் ஆடம்பரமே மதிக்கப்படுகிறது. அன்பும் அறிவும் மதிக்கப்படுவதில்லை. அதனாலேயே இதை பொய்யான உலகமென்பது. அறியாமையை (ஆணவத்தை) அறவே அகற்றி ஆக்கிக் கொடுத்தருளும் உடல் அரு உடல். அரு உடல் என்றா லும் நுண் உடல் என்றாலும் ஒன்றே. மாறிப் பிறக்கும் உயிர் கட்கு அவ்வுயிர்களின் வினைக்கு ஈடாக பொருந்தும் பண்பும், வாழ்நாளும், நில உலக வாழ்க்கையில் ஏற்படும் செல்வ வறுமைகளும் கருவினுள் பதித்தருளினான்.

**கருவை ஒழித்தவர் கண்ட நால் மூவேழ்**
**புருடன் உடலில் பொருந்தும் மற்றோரார்**
**திருவின் கருக்குழி தேடிப் புகுந்தது**
**உருவம் இரண்டாக ஓடி விழுந்ததே. (439)**

பிறவாப் பெருநெறி பற்றிய திருவடி உணர்வு கை வந்த சிவனடியார் கருவை ஒழித்தவர் ஆவர். கரு என்பதிலேயே அறியாமை நிறம் தெரிகிறதே. பரு உடலுக்கென கண்டு அறிந்த இருபத்தைந்து பொருள்களும் அவ்வுண்மையினைக் காணாதாரைப் பொருந்தும். அவர்களே மற்றோரம். கருவை ஒழித்தவர் சத்தினிபாதர். வாழ்க்கைத் துணையின் கருவில் வெண்ணீர் (சுக்கிலம்) ஓடி விழுந்தது. ஆங்குள்ள செந்நீருடன் கலந்து அதனால் இரண்டாகிய வடிவங்களுள் ஒன்றாக திரிபுற்று வளர்ந்தது. வெண்ணீர் சுக்கிலம் - வெண்மை நிறம். பெண் மாதவிடாய் நின்று போனது செந்நீர் - அது கழிக்கப்பட வேண்டிய கெட்ட இரத்தம் அதனுடன் சேர்ந்த வெண்மை என்ன ஆகும். அதிலிருந்து வந்த குழந்தை எப்படி இருக்கும். அதுதான் நாமும் நமக்குப் பிறக்கும் குழந்தையும்.

**விழுந்த லிங்கம் விரிந்தது யோனி**
**ஒழிந்த முதல் ஐந்தும் ஈரைந்தோடு ஏறி**
**பொழிந்த புனப் பூதம் போற்றும் கரணம்**
**ஒழிந்த நுதல் உச்சி உள்ளே ஒளித்ததே. (440)**

வாழ்க்கைத் துணைவராம் (காற்றால் ஆனவர்) காதலர் அன்புற்று இன்புறும் வாயில் இலிங்கமாகிய (ஆண்குறி) உருவுடம்புக்கு வாயில் வித்துப் புகுந்தது. வித்தாவதெல்லாம் உள்ளம். அதனை ஏற்றுக் கொள்ளும் பொருட்டு கருவழியாக யோனி (பெண்குறி) விரிந்தது. நுண்ணுடலில் தங்கியிருந்த ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் நுண்மை ஐந்தும், அறிதற் கருவி ஐந்து (ஞானேந்திரியம்) செய்தற்கருவி ஐந்து (கர்மேந்திரியம்) ஆகப் பத்தும், பூதங்கள் ஐந்தும் தோன்றின. அவற்றால் போற்றப்படும் காரணங்களும் கூடின. புருவ நடுவிலும் (புருவ பூட்டு) சிரசின் உச்சியிலும் நின்று உணரும் தொழிலும் இடையறாது நிகழ்வதாயிற்று. அறிதற் கருவி செவி, மெய், கண், நாக்கு, மூக்கு செய்தற்கருவி கை, கால், வாய், எழுவாய், கருவாய், கரணம் - எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு, அறிவு. நிகழ்வதற்கு இடம் புருவ நடு உச்சி.

**பூவின் மணத்தை பொருந்திய வாயுவும்**
**தாவி உலகில் தரிப்பித்த வாறு போல்**
**மேவிய சீவனில் மெல்ல நீள் வாயுவும்**
**கூவி அவிழும் குறிக் கொண்டே போதே. (441)**

நீள் வாயு - தனம் செயன். கூவி அவிழும் - சப்தத்துடன் செல்லும். பூவின் வாசனையை எப்படி காற்று உலகமெல்லாம் பரப்புகிறதோ அதுபோல் கண்மலரில் தோன்றும் எண்ணங்களின் வாசனையை பரந்த காற்று பரப்பும். உயிர்க்காற்று பிறக்கும். அதுவே பிராண வாயு, இதுவே 10 ஆக விரியும், (பிராணன் அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன்) நாகன் - விழிக்காற்று, கூர்மன் - இமைக்காற்று, கிருகரன் - தும்மல் காற்று, தேவதத்தன் - கொட்டாவிக் காற்று, தனஞ்சயன் - வீங்கச்செய்யும் காற்று)

**ஏற எதிர்க்கில் இறையவன் தானாகும்**
**மாற எதிர்க்கில் அரியவன் தானாகும்**
**நேரொக்க வைக்கின் நிகர் போதத் தானாகும்**
**பேரொத்த மைந்தனும் பேரரசாளுமே. (442)**

சிவனை அதாவது அன்பை மறவா காதலிருவர், ஒருவரை யொருவர் இழக்கவேண்டும். தன்னை உடல் என்பதை மறத்தலே - இழத்தல் - அப்பொழுது ஆன்மீக ஒருமை ஏற்படும். அந்த எண்ணம் - விந்து (நினைவோசை) நடு நாடி வழியாக ஒளி யாற்றல் எனும் நாத சத்திக்கும் மேல்பட்டு எதிர்த்துச் செல்லல் சிறப்புடையது. அங்ஙனம் செல்லின் அதன் வாயிலாகப் பிறக்கும் குழந்தை சிவ வடிவாகவே தோன்றுவன் (முருகன் போல, ஞான சம்பந்தர் போல - ஆறாவது அறிவோடு) அது போலன்றி அமைதி யாக எதிர்த்தால் செயற்கரிய செய்கை செய்யும் (விஞ்ஞானி)

சீரியோனாகத் தோன்றும். சமமாகச் சென்றால் தன்னை ஒத்த அறிவோடு தோன்றும். நிகர்போதம் - சிறந்த அறிவு.

**ஏயம் கலந்த இருவர் தம் சாயத்து**
**பாயும் கருவும் உருவாம் எனப் பல**
**காயம் கலந்தது காணப் பதிந்தபின்**
**மாயம் கலந்த மனோ லயமானதே. (443)**

(பல அண்டங்களில் (முட்டை) பிறந்து இறந்து அலைந்தது) பல பிறவிகளில் பிறந்து வருந்திய உயிர் இருவராய் கலந்து இல்வாழ்க்கையாகி நல்லறம் பேணுகின்றனர். அவ்விருவருடைய பண்புகளுக்கு ஏற்ப குழந்தைகள் பிறக்கும் கரு உருவாகும். அதற்கு தாயின் உணவின் சாரமே குழந்தைக்கு உணவாகும். ஆகையால் தாயின் உணவுத் தன்மையே குழந்தை என்றால் மிகையாகாது. இருவர்தம் சாயம் என்பது நிறம். நிறக்கலப்பே குணமாகும். ஆகவே இருவரும் கருத்து ஒருமித்து ஈடுபட்டால் தான் நல்ல கரு அமையும் மனோலயம் என்பது இதுவே.

**கர்பத்து கேவல மாயாள் கிளைகூட்ட**
**நிற்கும் துரியமும் பேதித்து நினைவெழ**
**வற்புறு காமியம் எட்டாதல் மாயேயம்**
**சொற்புறு தூய்மறை வாக்கினாம் சொல்லே. (444)**

உயிர் எனும் ஆவி கருப்பையினுள் அருவமாகவே இருக்கும் பல்வேறு கருவிகளாக விரியும். மாயா காரியக் கருவிகளை தொழில்படுத்துவது நடப்பாற்றல். உயிர் கருவமாக இருக்கும் நிலை புலம்பு நிலை என்பர். புலம்பு - கேவலம். நடப்பாற்றல் மாய கருவிகளை கூட்ட புலம்புப் பேருறக்கம் ஆகும். அவ்வுறக் கத்தினின்றும் வேறுபடுத்தி அந் நடப்பாற்றல் நினைவு எழச் செய்யும். அதன்மேல் காமிய இன்ப நுகர்வுக்கு அன்பு எழும். அதனால் மாயேயமாய் புறத்து தோன்றும் ஓசை முதலியவை அகத்தை எட்டும். அதற்கு தூண்டும் கருவியாக நிற்பது அகப் புறக் கலனாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு எனும் நான்குமாம். இதை வைத்துத்தான் நாரதர் பிரகலாதனுக்கு கருவியாக 'நாராயண' என்ற நாமம் ஓதினார். அபிமன்யுவுக்கு போர் சக்கர, வியூகம் அமைக்கச் சொல்லிக் கொடுக்கப்பட்டது என்பது போன்ற புராணங்கள். அப்படி மனக் கருவிகளை தூண்டுவது நால்வகை ஓசைகள் ஆகும். இவ்வோசை வானி லிருந்து வருவதாகும். எட்டாதல் - கிட்டும்படியாதல். எண் வகை நுகர்வுப் பொருள்.

**என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்**
**செம்பால் இறைச்சி திருந்த மனைசெய்து**
**இன்பால் உயிர்நிலை செய்த இறை ஓங்கும்**
**நன்பால் ஒருவனை நாடுகின் றேனே. (445)**

எலும்புகளால் நெருக்கம் பெற்று, நரம்பினைக் கொண்டு வரிந்து கட்டி தசைகளை குருதி நீரால் இணைத்தமைத்து திருந்திய மனை செய்து அருளினன் சிவன். அம்மனை உடம் பெனப்படும். உடம்பகத்து உயிர் தங்கி இருக்கும். பூட்டொத்த மெய்யில் பொறிப்பட்ட வாயு. அதனால் இன்பால் உயிர்நிலை எனப்பட்டது. அப்படி உதவிய ஒருவனை நாம் ஏற்றித் துதி செய்வோமாக.

**பதஞ் செய்யும் பால் வண்ணன் மேனிப் பகலோன்**
**இதம் செய்யும் ஒத்து உடல் எங்கும் புகுந்து**
**குதம் செய்யும் அங்கியின் கோபம் தணிப்பன்**
**விதம் செய்யுமாறே விதித்து ஒழிந் தானே. (446)**

அழகு என்பது உருவத்தில் அல்ல. அருவமே அழகு. உருவம் ஆபாசமே. உடலுக்கு அழகு தருவது வெண்மை நிறம் பொருந்திய நெற்றி அமிழ்து பால் வண்ண மேனிப் பகலோன் எனப்படும். அவ்வமிழ்து இனிமையாக்குதற் பொருட்டு உடலெங்கும் புகுந்து நிறைந்து நின்றது. குதமாகிய மூலத்திடம் நின்று தோன்று தீயின் வெப்பத்தினை தணிவிக்கும் பொருட்டு இவ்வமிழ்தினை அமைத்தருளினன் சிவன்.

**ஒழி பல செய்யும் வினையுற்ற நாளே**
**வழி பல நீராடி வைத்தெழு வாங்கிப்**
**பழி பல செய்கின்ற பாசக் கருவைச்**
**சுழி பல செய்து சுடாமல் வைத்தானே. (447)**

செய்யத்தகாத செயல்களை இந்த ஆருயிர்கள் செய்தாலும் கருணைக் கடலான சிவன் மன்னிக்கிறான். தன் அக்னியால் சுடுவதில்லை. அடுத்து அடுத்து திருந்த வாய்ப்புக் கொடுத்து அவைகளை பொன்னாக்குகிறான்.

**சுக்கில நாடியில் தோன்றும் வெள்ளியும்**
**அக்கிரமத்தே தோன்றும் அவ் யோனியும்**
**புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்**
**அக்கரம் எட்டும் எண் சாணது வாருமே. (448)**

நடு நாடியாக வருவது வெண்மையான சுக்கிலம். அதை வித்து என்றும் விந்து என்றும் கூறுவர். அம்முறையில் பெண் களிடம் நீர்சத்தி அதிகமாயும் நெருப்பு குறைந்திருப்பதால் சுரோணிதம் எனப்படும். சுரப்பது சுரோணிதம். இரண்டிலும் இருபத்திமூன்று இருபத்திமூன்றாக நாற்பத்தாறு ஜீவ அணுக்கள் ஒன்றாகி இரண்டுக்கும் பொதுவாக நாலு அந்தக்கரணத்தில் முடிந்து ஐம்பது எழுச்சிகள் ஆகிறது என்பதை அறியும் அறிவும் ஒன்று உண்டு. இந்தச் சுரோணிதம் உற்பத்தியாகும் இடம் யோனி எனப்படும். எட்டு விரற்கடை அளவு புறப்பட்டு அதில் செம்பாதி நாலு தங்கும் நாலு வீணாகும். ஒவ்வொரு

உடம்பும் அதனதன் கைக்கு எட்டுச் சாண் நீளமும், நான்கு சாண் அகலமும் இருக்கும். எண் சாண் உடம்புக்கும் சிரசே பிரதானம். எட்டு என்பது ஓங்கார ஒலி உகம் - ஓம் இதில் உள்ள மூன்று எழுத்து, நிலம், நீர், நெருப்பு, உயிர்காற்று, விசும்பு ஆகிய பெரும்பூதம் ஐந்துமாகும். இவையெல்லாம் சூட்சுமம். பெரும் பூதம் ஐந்தும் லகாரம், உகாரம், ரகாரம், யகாரம், அகாரம் என்றும் கூறுவர். இந்த எட்டையுமே வித்து எழுத்து புரியட்ட காயம் என்பர். பீஜ எழுத்து என்பர்.

**போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனும்**
**கோசத்துள் ஆகம் கொணர்ந்த கொடைத் தொழில்**
**ஏகத்துள் ஆங்கே ஈரெட்டு மூன்றைந்து**
**மோகத்துள் ஆங்கு ஒரு முட்டை செய்தானே. (4 49)**

சிவன் ஆருயிர்கள் போகம் துய்ப்பற் பொருட்டு அவனும் போகியாக இருந்தருள்கின்றான். அங்ஙனம் இருப்பதால் அவன் தூய்மை எதுவும் கெட்டுவிடாது. நம்மில் அநேகர் குடிகாரர்கள் மத்தியில் குடிக்காமல் இருப்பவர்கள் உண்டு. பெண்கள் மத்தி யில் பெண் ஆசை இல்லாதவர்கள் உண்டு. பணத்தில் மத்தியில் பண ஆசை இல்லாதவர் உண்டு. இத்தகையோரே நிறைவு பெற்றவர், நிறை மொழி மாந்தர் என்பது. இவர்கள் சொல் மந்திரமாகும். உயிர் ஜனிக்க ஒரு ஆணையும் பெண்ணையும் தூண்ட வேண்டியுள்ளது. உயிர்களைக் கருவாக முட்டையில் செலுத்தும் செயல் தூண்டப்படுகிறது. அங்கு புகுந்த உயிர் ஐவேறு வகையான ஒன்றன்பின் ஒன்றாகச் சேர்ந்து பின்னிப் பிணைந்து பின்னல் உடம்பாகிறது. ஐவகை உடம்பு: பரு உடம்பு (அன்னமயகோசம்), வளி உடம்பு (பிராணமயகோசம்), மன உடம்பு (மனோமயகோசம்), அறி உடம்பு (விஞ்ஞானமய கோசம்), இன்ப உடம்பு (ஆனந்தமய கோசம்) இந்த முப்பத் தொரு உண்மைகளும் ஐந்து உடம்பிலே உள்ளது. அவை உடல் மெய் இருபத்தி நாலு. உணர்வு மெய் ஏழு. இவற்றை முறையே ஆண்ம தத்துவம், வித்யா தத்வம் என்பர். அங்கு ஈரெட்டு எட்டு பதினாறு, மூன்று ஐந்து பதினைந்து.

**பிண்டத்தில் உள்ளுறு பேதைப் புலன் ஐந்தும்**
**பிண்டத்தின் ஊடே பிறந்து மரித்தது**
**அண்டத்தின் உள்ளுறு சீவனும் அவ்வகை**
**அண்டத்து நாதத்து அமர்ந்திடும் தானே. (450)**

பிண்டமாகிய உடம்பின் அகத்து ஐம்பொறிகளின் ஊடே புலப்படும் பொருளை ஏற்றுக் கொள்ளும் புலன்கள் ஐந்து. அவை ஓசை, உணர்வு, ஒளி, சுவை, நாற்றம் என்பன. இவற்றை புலனறிவு, தன் மாத்திரை எனவும் கூறுவர். புலன்கள், செவி, கண், மூக்கு, வாய், உடல் இவைகளை இடமாகக்

கொண்ட மெல்லிய நரம்புகளே உணர்வை உணர்த்தும். அறிவுடையன போலும் தோன்றினும், உண்மையில் அறிவிலாதனவே. பேதைப்புலன், மரித்தது என்பது ஸ்மரித்தல். மனதுக்குள்ளேயே பேசுதல், நாதத்தோடு ஐந்தும் பொருந்தி இருப்பதாலேயே கோசம் எனப்படுகிறது.

**இலைப் பொறி ஏற்றி எனது உடல் ஈசன்**
**துலைப் பொறியில் கரு ஐந்துடன் ஆட்டி**
**நிலைப் பொறி முப்பது நீர்மை கொளுவி**
**உலைப் பொறி ஒன்பதில் ஒன்று செய்தானே. (451)**

சிவன் என்னிடம் தத்தாகக் கொடுத்த உடலும் அதன் கண் காணப்படும் பொறிகளும் (இலைப்பொறி) நிலையுடையன அல்ல. இலை என்பது இல்லாத என்பதே பொருள். தூண்டித் தொழில் படுத்தும் துணைப் பொறியாம் உணர்த்து மெய் ஐந்தென்ப அவற்றுடன் உயிர்களை இணைத்து வினைக்கீடாக ஆட்டுபவன் சிவன். நிலைப் பொறியாக அமைந்தது முப்பது. அது முகத்தில் உலைதலை உடைய உடலகத்துக் காணும் பொறிகளும் உலைதலையுடையன. ஒன்பது ஓட்டைகள் உள. வளர்த்து மெய் ஐந்து அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்பன. உணர்வு மெய் ஆறு காலம், வாழ், உழைப்பு, உணர்வு, விழைவு, மருள் என்பன. உடல் மெய் இருபத்திநான்கு. முதல் காரணம் தன்மாத்திரை ஐந்து.

**இன்புற்றிருவர் இசைவித்து வைத்த மண்**
**துன்பக் கலசம் அணைவான் ஒருவனே**
**ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு**
**வெந்தது சூளை விளைந்தது தானே. (452)**

உடம்பு இடும்பைக்கு இலக்கம். சனியன், சனியனை விலைக்கு வாங்கியதுபோல இதனை சிவனிடம் கேட்டுப் பெற்றவர் இருவர். என்னே அறியாமை. அவ்வுடலில் ஒன்பது ஓட்டைகள். ஓட்டை உள்ள பாத்திரம் எப்படி ஐயா நிலைக்கும். அப்படியும் கொஞ்ச நாளாவது இருப்பதுதான் அதிசயம். அந்த ஒன்பதும் நீர்ச்சால் எனப்படும். நீருக்குப் போக வரப் பாதை. அதனிடம் பத்து பொறிகள். அப்பத்தும் அறிதற் கருவியும் செய்தற் கருவியுமாகும். புறக்கருவி பத்தும் அகக் கருவி எட்டும் ஆக பதினெட்டு. அவற்றில் நுண்மை ஐந்து, காரண சரீரம் மூன்று மனம், புத்தி, அகம். இவ்வுடல் கலசம் நெருப்பில் வெந்ததாகும்.

**அறி ஈருடம்பினில் ஆகிய வாறும்**
**பிறி ஈரதனில் பெருகும் குணங்கள்**
**செறி ஈரவற்றினுள் சித்திகள் இட்ட**
**தறிய ஈரைந்தினுள் ஆனது பிண்டமே. (453)**

முன் வினைக்கு ஈடாக கருவினுள் அமைக்கப்பட்ட பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்னும் ஆறினுக்கும் ஏற்றவாறு உயிர்கட்கு குணங்கள் அமையும். அவ்வுண்மையை நாம் மறந்து இருக்கிறோம். அங்ஙனம் பெருகும் குணங்களில் நல்லது எது? கெட்டது எது? என்று பகுத்து அறிந்து நல்லதையே பின்பற்றுவீராக. கருவினில் வித்து இட்டது முதல் அப்பிண்டம் பத்துத் திங்கள் கருப்பையில் வளரும். சித்திகள் என்பது நிறைவேற்றும் முறைகள். பிண்டம் - உடல், பேறு - செல்வம், இழவு - வறுமை, மூப்பு - உயர்வு, சாக்காடு - இழிவு, பிணி - துன்பம், பிறியீர் - பிரிந்து அறியீர்.

**உடல் வைத்த வாறும் உயிர் வைத்த வாறும்**
**மடை வைத்த ஒன்பது வாய்தலும் வைத்து**
**திடம் வைத்த தாமரைச் சென்னியுள் அங்கி**
**கடை வைத்த ஈசனை கை கலந்தேனே. (454)**

சொன்னதையேதான் திரும்பத் திரும்பச் சொல்லக் காரணம் நமக்கு பதிய வைக்கத்தான். பழைய பதிவுகளை நீக்க வேண்டியது. முதல்வேலை, இனி காலியானதில் (இருட்டு) புது ஒளியைச் செலுத்தி இருளைப் போக்கச் செய்து ஒரே ஒளியாக்குவதே இயக்கம். பழைய சாயத்தை சுரண்டி எடுப்பது நீரின் வேலை. அப்புறம் புதிதாக வெள்ளை அடிப்பது சூரியன் வேலை. அதையே சித்திரகுப்தன் என்பது. பின் அதையும் போக்கி சுத்த வெளி ஆக்குவது ஈசுவரன். அதுவரை நம் சிந்தனை செலுத்தப்படவேண்டும். இது சிலருக்கு ஒரே ஜன்மத்தில் கிட்டுகிறது. சிலருக்கு பல ஜன்மங்களில் ஆகிறது. அவரவர் ஆர்வத்தையும் முயற்சியையும் பொருத்தது.

**கேட்டு நின்றேன் எங்கும் கேடில் பெருஞ்சுடர்**
**மூட்டு கின்றான் முதல் யோனி மயனவன்**
**கூட்டு கின்றான் குழம்பின் கரு வைஉரு**
**நீட்டு நின்று ஆகத்து நேர் பட்டவாறே. (455)**

ஆராய்ச்சிகளின் முடிவில் - உயர்ந்த நூல்கள் வழி கல்வியும், கேட்டலால் அடையும் நுண் உணர்வாலும் தெரிந்து கொண்ட உண்மை எல்லாம் அருட்பெரும்ஜோதியின் திருவிளையாடலே. அவன் ஆருயிர்களை முன்வினைக்கு ஈடாக உலகு உடல்களில் பொருந்துமாறு செய்யும் வினை முதற்காரணம் அவனே. குழம்பு போன்று கருவைக் கூட்டி அதை உருவாக்கி உடலை வளர்க்கின்றான். அவ்வுடலுடன் ஒன்றாகி கலப்பால் நின்றருளுகின்றனன். இதில் நாம் சந்தோஷப்படவோ கவலைப் படவோ என்ன இருக்கிறது.

**பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்**
**காவுடைத் தீபம் கலந்து பிறந்திடும்**
**நீரிடை நின்ற குமிழி நிழலதாய்**
**பாருடல் எங்கும் பரந்து எட்டும் பற்றுமே. (456)**

பூந்துகில் ஆடை போன்றது இப்பரந்த உலகம். பூவாகிய கண்களில் (கருப்பை) மொட்டாகிய விந்துவால் (நினைவோசை) மொட்டு விரியும். விரிந்தபின் கருத்தோன்றி பிறந்திடும். அதுதான் பிண்டமாகிய உடல். அதன்பின் பிண்டத்தில் பிண்டம் உடல் கரு. அக்கரு நீரிடை நிற்கும். நீர்க்குமிழியின் நிழல் போன்றது. எட்டையும் இணைத்து குடை போல் விரிந்து நிற்கும்.

**எட்டினுள் ஐந்தாகும் இந்திரியங்களும்**
**கட்டிய மூன்றும் கரணமும் ஆயிடும்**
**ஒட்டிய பாசம் உணர்வெனும் காயப்பை**
**கட்டி அவிழ்த்திடும் கண்ணுதல் காணுமே. (457)**

எட்டு எட்டு என்கிறோமே அதன் விபரம். நுண் உடலாகிய ஓசை, உணர்வு, ஒளி, சுவை, நாற்றம் என ஐந்தும் புறக்கண் களுக்கு புலப்படாதவை. ஆனால் அது புலப்படும் கண் மனக் கண் எனப்படும். அதுவே உயிர்நிலை. அகப்புறக்கண் மனம், எழுச்சி, இறப்பு என்ற மூன்று பகுதியை உடையது. இடையே திருவடிப்பேறு எய்தும் செவ்விட (செம்பொருள் காண்பது அறிவு) வாய்ப்பின் அக்காலத்தில் இந்நுண்ணுடல் அதில் ஒடுங்கும். அந்த நுண்ணுடலுடன் பரு உடலுடன் புகுந்ததும் சுட்டுணர்வு ஏற்படும். சுட்டு உணர்வை பாசம் என்று சொல்கிறோம். உடம் போடு உடம்பி ஒட்டி உணர்வதால் பசை போலாகிறது. உரு உடலை காயப்பை என்பர். இதையெல்லாம் செய்பவன் சிவன். ஆனால் செய்யாததுபோல் காட்டிக் கொள்வான். பின்பு அறிவு வந்தபோது அக்கட்டினை அவிழ்த்து தன் திருவடியில் சேர்த்துக் கொள்வான்.

**கண்ணுதல் நாமம் கலந்து உடம்பாயிட**
**பண்ணுதல் செய்து பசு பாசம் நீங்கிட**
**எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை**
**மண் முதலாக வகுத்து வைத் தானே. (458)**

நெற்றிக் கண்ணையுடைய (3-வது கண் - கடைக்கண்) சிவபெருமானின் மந்திரப் பெயர் 'நமசிவாய'. இந்தத் திரு எழுத்து ஐந்தும் நம் உடலில் அந்தக்கரணம் நாலும் அதை ஆட்சி பண்ணும் ஆறும் குறிப்பிடும். இச்சை, செயல், அறிவு இயற்றலால் இலயப் போக அதிகார பொருள். ஆக்ஞாசக்கரம், அங்ஙனம் கூறும்போது 'ந'கரம் இறுப்பு மெய்யினையையும் 'ம' கரம் மனத்தினையும், 'சி' கரம் ஆட்சியையும், 'வ' கரம் எண்ணத்தினையும் 'ய' கரம் எழுச்சி யினையையும் குறிக்கும்.

இதுவே கண்ணுதலோன் நாமம் கலந்து உடம்பாய் புண்ணுதல் ஆகும். திரு ஐந்தெழுத்தின் தொகையாகக் கூறப்படும் அகர உகர மகர நாதம் விந்து என்னும் ஐந்தும் முறையே எழுச்சி, இறப்பு, மனம், ஆண் எண்ணம் என்பனவற்றை இயைந்து இயக்கும் என்பதும் ஒன்று. இவற்றால் திருவடி உணர்வு கை வந்து பசு பாசம் நீங்கப் பெறும். பசு - சிற்றுணர்வு, பாசம் - சுட்டுணர்வு. அவற்றை தமிழ் மக்கள் புரிந்து கொள்ள திருமறை, திருமுறை ஆகிய வேத ஆகமங்களை தக்க சான்றோர் மூலம் ஆக்குவித்தனன் சிவன். அவ்வற்றை அன்பியல், அருளியல் என்று இரண்டாக வகுத்தனன். அன்பியல் (கர்மகாண்டம்) உலகியலாகிய அறம், பொருள், இன்பப் பகுதி. அருளியல் மூன்றையும் விட்ட வீடாகும். மண்முதல் என்பது அன்பியலுக்கு அருளியல் என்பது மண்முதல் சிவம் ஈறாக முப்பத்தாறு மெய் களாகும். கண்ணுதல் நாமம் - நமசிவய. உடம்பு - உள்ளுறுப் பிற்கு போர்வை, பசு - பிணிப்பியல், பசுத்தன்மை - நாதத்தோடு கலந்த பிணிப்புத் தன்மை. வேதம் - மறை, இசைத்த - இயற்றுவித்த.

**அருள் அல்லது இல்லை அரனவன் அன்றி**
**அருள் இல்லை அதலின் அவ்வோர் உயிரைத்**
**தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்**
**வருகின்ற நண்பு வகுத்திடும் தானே. (459)**

அருளும் அரனும் மரமும் காழ்ப்பும் போல் பிரிவிலா இருநிலை ஒருபொருள். ஒரு நிலை அறிவு நிலை, மற்றொன்று ஆற்றல் நிலை. அறிவு நிலை கடந்த நிலை, ஆற்றல் நிலை கடத்தும் நிலை. அருளின்றி அவனும் இல்லை. அவனின்றி அருளும் இல்லை. ஆருயிர்களை உடலுடன் இணைக்கும் செயலை வனப்பாற்றல், நடப்பாற்றல் இருவரிடமும் ஒப்படைக் கப்பட்டன. கைத்தாயர் - ஒழுக்கத்தாய்ர், செவிலித்தாயர், வளர்ப்புத் தாயர், கை- ஒழுக்கம்.

**வகுத்த பிறவியை மாது நல்லாளும்**
**தொகுத்து இருள் நீக்கிய சோதியவனும்**
**பகுத்து உணர்வாகிய பல்லுயிர் எல்லாம்**
**வகுத்து உள்ளும் நின்றதோர் மாண்பது வாமே. (460)**

நடப்பாற்றலாகிய (உடல்) ஆதி மாது நல்லாள் என்பர். அவள் ஆருயிர்களுக்கு வின்னைக்கீடாக பிறவியை வகுத்தருளினள். வனப்பாற்றலாகிய திருவருள் சோதி நல்லாளாகும். அவள் வழியாக (காற்று) சோதி சிவன் உயிர்களின் அறியாமையை நீக்கி அருள்வன் ஆதி என்பதை ஆகாயமாகவும் (நுண்ணிய பகுதி) பருப்பொருள் பகுதி மண். மண்ணகத்தான் ஒக்கும் வானகத்தான் ஒக்கும். வேதகத்தான் ஒக்கும்.

**மாண்பது வாக வளர்கின்ற வன்னியும்**
**காண்பது ஆண் பெண் அலியெனவும் கற்பனை**
**பூண்பது மாதா பிதா வழி போலவே**
**ஆம் பதி செய்தான் அச்சோதி தன் ஆண்மையே. (461)**

எல்லாம் ஒன்று என்பதுதான் உண்மை. இதை மனப் பூர்வமாக ஒப்புக்கொள்ளும் ஆற்றலைப் பெறாதவரை எல்லா பேத உணர்ச்சிகளும் நம்மை வேதனைக்குள்தான் ஆக்கும். மூலத்தீயை சார்ந்து வாழும் கருவியை வெளிப்படும் முன் ஆண், பெண், அலி எனக் காண்பது கற்பனையாகும். பேரொளிப் பிழம்பாம் அருட் பெருஞ்சோதி தன் அறிவாண்மையினால் கருவுற்ற உயிரின் தாய் தந்தை போல சாயலை (நிழலை) அமைத்து அருளினன். உடலமைப்பு பெரும்பாலும் தாய் போலும் தந்தை அறிவே மகனறிவாகவும் இருக்கும்.

**ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்**
**பூணி ரண்டு ஒத்துப் பொருந்தில் அலியாகும்**
**தான் மிகுமாகில் தரணி முழுதாளும்**
**பாணவ மிக்கிடில் பாய்ந்தது மில்லையே. (462)**

ஆணாகிய வலப்பக்க மூச்சு மிகுந்து சென்றால் ஆணாகும். இடப்பால் மூச்சு மிகுந்தால் பிறக்கும் குழந்தை பெண் ஆகும். சுவாசம் ஒத்து இருந்தால் குழந்தை அலியாகும். ஆள் வினை முயற்சியில் கருத்து மிகுதியாயிருந்தால் பிறக்கும் உயிர் சிறப்பாகப் பிறக்கும். தரணி ஆளும். விந்து வெளிறயேறாது. பானவம் - பண்ணவம், திண்மை.

**பாய்ந்தபின் அஞ்சோடில் ஆயுளும் நூறாகும்**
**பாய்ந்தபின் நாலோடில் பாரி/னில் எண்பதாம்**
**பாய்ந்திடும் வாயுப்பகுத் தறிந்து இவ்வகை**
**பாய்ந்திடும் யோகிக்கு பாய்ச்சலு மாமே. (463)**

காதலர் இருவரும் மருவிக் கூடியிபின் முறைப்படி உயிர்ப்பு ஏழில் ஓடி ஐம்பூதங்களிலும் பரந்து ஓடினால் பிறக்கும் உயிருக்கு ஆயுள் (அகவை) நூறு ஆகும். நான்கு ஓடினால் இம்முறையாகச் செல்லும் மூச்சை பகுத்து உணர்ந்து காண்க. நாம் பொதுவாக சுவாசத்தை மதிப்பதில்லை. காசு கொடுத்து வாங்கும் உணவுப் பொருள்களுக்கு கொடுக்கும் மதிப்பை, எது இல்லாமல் ஒரு நிமிடம் இருக்கமுடியாதோ, அதை நினைப்பதே இல்லை. அது அறிவில்லாதது, திறந்த வீட்டில் நாய் நுழைந்தது போல் நுழைந்து செல்கிறது. நாய் வாலை நிமிர்த்த முடியுமா? அதை உணர்ந்து உறவோடிருப்பவர் யோகியர். அவர்கள் நினைத்த வாறு சுவாசத்தை அடக்கி ஆளுவர்.

**பாய்கின்ற வாய்வு குறையில் குறளாகும்**
**பாய்கின்ற வாயு இளைக்கின் முடமாகும்.**
**பாய்கின்ற வாயு நடுப்படின் கூனாகும்**
**பாய்கின்ற வாயு மாதர்க்கில்லை பார்க்கிலே. (464)**

சர ஓட்டம் செல்கின்ற உயிர்க்காற்று அளவில் குறைந்தால் குழந்தை குட்டையாக பிறக்கும். இளைப்போடிந்தால் முடமாகும். இடைநிலைப்பட்டால் கூனாகும். இவை பெண்பாலர்க்கு இல்லை.

**மாதா உதரம் மலமிகில் மந்தனாம்**
**மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்**
**மாதா உதரம் இரண்டொக்கில் கண் இல்லை**
**மாத உதரத்தில் வந்த குழலிக்கே. (465)**

எனக்கு வயது எண்பது. இப்பொழுது இந்த மந்திரம் எனக்குப் பயன்படாது. காலம் கடந்த விஷயம். ஆனால் வாலிப வயதில் இதைப்படி என்று கொடுத்திருந்தால் படித்திருப் பேனா? இன்றைய வாலிபர்கள் அப்படித்தான் இருக்கிறார்கள். வயதான பெற்றோர்கள். எல்லோரும் இந்த மாதிரி நூல்களைப் படிப்பதே இல்லை. பெண்களோ கேட்கவே வேண்டாம். இப்படி இருந்தால் நாட்டில் நல்ல பிள்ளைகளை எப்படிப் பார்க்க முடியும். இந்த மந்திரம் தாயார்கள் பகுதி. காதலனை கூடுவதற்குமுன் வயிற்றில் மலம், சிறுநீர் தேக்கம் கூடாது. அப்படி இருந்தால் கருவாகும் குழந்தை மந்தமாக, ஊமையாக, குருடாக பிறக்கும்

**குழந்தையும் ஆணாம் வலத்தது ஆகில்**
**குழந்தையும் பெண்ணாம் இடத்தது வாகில்**
**குழந்தையும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்**
**குழவி அலியாகும் கொண்டகால் ஒக்கிலே. (466)**

பெண்களுக்கு கருப்பை இரண்டு பக்கங்களிலும் உண்டு. அதில் வலப்பக்கம் சுக்கிலம் போனால் ஆண், இடப்பக்கம் போனால் பெண். அபானன் என்பது வெளியே தள்ளும் காற்று அது எதிர்த்தால் இரண்டிலும் போகும். அது இரட்டைக் குழந்தை. இரண்டிலும் ஒத்து சுரோணிதமானால் குழந்தை அலியாகும்.

**கொண்ட நல்வாயு இருவர்க்கும் ஒத்தொழில்**
**கொண்ட குழவியும் கோமள மாயிருங்**
**கொண்ட நல்வாயு இருவர்கம் குழறிடில்**
**கொண்டதும் இல்லையாம் கோல் வளையாட் கே. (467)**

ஆண் பெண் உடல் உறவில் யாதொரு குழப்பமுமின்றி மனப்பூர்வமாக தன்னை ஒப்படைக்கவேண்டும். அப்படி அல்லாமல் வற்புறுத்தப்பட்டு ஈடுபடும் ஆணோ, பெண்ணோ

அனுபவிப்பது இன்பமில்லை துன்பமே. இருட்டறையில் பிணத்தோடு புணர்ந்தது போலவே. உணர்வு ஒன்றுவதே கருத்து ஒருமித்தல். அப்படி ஒத்த கருத்தினருக்கு பிறந்த குழந்தை உலகில் யாவரும் விரும்பும்படி அழகாகவும், நற்குணப் பண்பு களோடு இருக்கும். அப்படி இல்லையெனில் அநேகமாக கருத்தரிக்காது. அப்படி தரித்தால் பன்றி குட்டிபோட்ட மாதிரித் தான்.

**கோல் வளை உந்தியில் கொண்ட குழவியும்**
**தால் வளை உள்ளே தயங்கிய சோதியாம்**
**மால் வளர்ந்து உள்ளே பகலவன் பொன்உருப்**
**போல் வளர்ந்து உள்ளே பொருந்து மாமே. (468)**

இந்த மந்திரம் வீட்டு நெறியைக் காட்டுவதாகும். தால் என்றால் நாக்கு. அண்ணாக்கு, அண்ணாக்குக்கு நேரே அகண்ட ஒளி காட்டி புண்ணாக்கி என்னை பிழைப்பித்த சாகாக் கலையாகும்: விந்துவை வீணாக்கி சாகும் குழந்தைகளைப் பெறுவது பாவச் செயலாகும். இழி செயல் வயிற்றில் போய்ச் சேரும் ஆகாரம் உயிரற்றது. உண்டது எல்லாம் மலமே. அதை உயிர்ப் பித்து சத்து ஆக்குவதற்கே இந்த உடல் என்னும் கருவி கொடுக்கப் பட்டது. சத்து வித்தாகினால் அது ஆனந்த மயமாகும். கண், நாக்கு, மூக்கு, செவி கூட்டத்தில் பண் ஆக்கும் பழம்பொருள் ஒன்று உண்டு. அதுவே பழைய விளக்கு. ஜோதி இருளில் மூழ்கி வீணாகக் கிடக்கிறது. விளக்கினைப் பிளந்து விளக்கினை ஏற்றி, விளக்கினைத் தூண்டினால் விளக்குடையான் பாதம் மேவலுமாமே. உந்தி என்பது கொப்பூழ் அல்ல. நெற்றிக்கண். கண்ணில் உள்ள கனல் எரிந்தால் மேல்நோக்கித் தான் எரியும். கொழுந்துவிட்டு எரியும்போது நீலநிறம் தோன்றும். அதை சாலவும் புல்லி சதமென்று இருப்பார்க்கு மாணிக்க நிறம் தோன்றும். அதன்பின் பொன் நிறமும் தோன்றும். அது உள்ளே பொருந்தும் ஜீவப்பிரம்ம ஐக்கியம் உண்டாகும். அகமுக பயிற்சி அடுத்த தந்திரத்தில் விபரமாக ஆராய்வோம்

**உருவம் வளர்ந்திடும் ஒண் திங்கள் பத்தில்**
**பருவமதாகவே பாரினில் வந்திடும்**
**மருவி வளர்ந்திடும் மாயையினாலே**
**அருவ மாவது இங்கு யாரறி வாரே. (469)**

கருவில் உருவம் பத்துமாத காலத்தில் வெளியே தள்ளப் பட்டு, அதன்பின் குழந்தை, இளமை, வாலிபம், வயோதிகம், சாவு என்பதைப் பருவம் என்பர். இது யாவரும் அறிந்ததே. ஆனால் அருவம் ஆகும் வளர்ச்சியே சாகாக்கலை. அதை அறிந்த பெற்றோரோ, குருவோ, யாரும் இல்லாமலே போய் விட்டது.

**இட்டான் அறிந்திலன் ஏற்றவன் கண்டிலன்**
**தட்டான் அறிந்தும் ஒருவர்க்கும் உரைத்திலன்**
**பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்**
**கெட்டேன் இம்மாயையின் கீழ்மை எவ்வாறே. (470)**

ஜோதி என்றுமே பிறக்காது. அறிவுக்கு ஆக்கமுமில்லை அழிவுமில்லை. அறிவுக்கு அறிவே ஆதாரம். ஆகவே குழந்தை யாக பிறப்பதே நிழல்தான். ஜோதி என்று கருதி உருவங்களைக் கண்டு ஏமாறாதீர். கண்டவர்களையெல்லாம் கும்பிட்டு வணங்க வேண்டாம். தோற்றத்துக்கு வருவது எல்லாம் மாயைதான். மற்றும் குழந்தை பெறும் பெற்றோருக்கு உடல் உறவு கொண்ட போதெல்லாம் குழந்தை கருவாவதில்லை. அப்படிப் பார்த்தால் ஒரேநாளில் இராப்பகல் என்று பாராமல் போகத்தில் ஈடுபடு வோர் உண்டு. ஆறு தடவை, ஏழு தடவை, ஏன் அப்படி அனுபவம் எனக்கே உண்டு. பதினெட்டு வயதில் திருமணம் கேட்பானேன். கருவுறுவதும் விபத்து போன்றதே. தாயும் அறிய மாட்டாள். தந்தையும் அறியமாட்டான். தட்டான் என்பது ஆவரண சத்தி. பூ உலகில் பொற்கொல்லரை குறிப்பிடும். பொன்னை மாற்றி என்ன ஆபரணம் செய்யப் போகிறோம் என்பதை அவன் அறிவான். அதுபோல் மாயா சக்தி அறிவாள். இதையெல்லாம் சாக்ஷி ரூபமாக இருந்து கவனிக்கும் பரம் பொருளும் அறிவான். ஆகவே மாயாள் வசப்பட்ட ஜீவன் கருவாகி உருவாவது அவன் முன் வினைப்பயன். அதைக் கெட்டேன் என்கிறார். கெட்டிப் பொருள் (Solid) ஆவது. கல்போல் கனமாவது பெரும் பாரக்கோடு.

**இன்புற நாடி இருவரும் சந்தித்துத்**
**துன்புறு மாசத்தில் தோன்றி வளர்ந்தபின்**
**முன்புற நாடி நிலத்தின்முன் தோன்றிய**
**தொன் புறநாடி நின்று ஓதலு மாமே. (471)**

இருவரும் என்பது உருவத்தால் ஆனவர்கள் அல்ல. அருவத்தால் ஆன பேரொளியும் சிற்றொளியும். ஒளியை ஒளி செய்து ஓம் என்று எழ வைத்தல். கண்ணொடு கண்ணினை நோக்கு ஒக்கின் வாய் சொற்கள் என்ன பயனுமில. அப்படி காணாத கண் ஒளி படலமாயிற்று. கண் காணி கண்டார் களவு ஒழிந்தாரே. இந்த ஞானம் பல பிறவிகளில் துன்புற்ற பின்னேயே வருகிறது. அடி உதவினால் போல் அண்ணன் தம்பி உதவமாட்டார் என்பது திருவடி ஞானத்தையே குறிக்கும். அது புற வாசலில் மலம் போகும் வழியில் அல்ல, முன் வாசலிலேயே நுழைவாயிலிலேயே வள்ளல் பிரானுக்கு வாய் கோபுரவாசல். கண்வாய், அந்தக் கண்ணாடியை நாடுங்கள்.

**குயிற் குஞ்சு முட்டையைக் காக்கைக் கூட்டிட்டால்**
**அயிர்பின்றி காக்கை வளர்க்கின்றது போல்**
**இயக்கில்லை போக்கில்லை ஏனென்பதில்லை**
**மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே. (472)**

காக்கைக் கூட்டில் குயில் (தனக்கு முட்டை பொறிக்கத் தெரியாத்தால்) முட்டையிட அதனை காக்கை சிறிதும் ஐயம் கொள்ளாது அடைகாத்து வெளிப்படுத்துவது போல, இறைவன் ஆவிகளின் வினைக்கீடாக ஆவிகளை அரு உரு உடம்போடு உருவுடல் பெற தந்தை கருவால் (உள மணுவாய்) இரண்டு மாதங்களும் தாய் கருவிலும் பத்து மாதங்களும் புகுத்தி அருளு கின்றான். அதனால் அனைத்து உயிரும் ஆண்டவன் மக்கள் என்பது புரியும். இனிமேலாவது உங்கள் பிள்ளைகளை எனது என்று உரிமை கொள்ளாதீர்கள். என் குழந்தை என்று சொல்வது மயக்கத்தால் கூறுவதாகும். உண்மை உணர்ந்தார் ஆசான் மாணாக்கனை ஓம்புவது போல் தம் மக்களை, பிற மக்களை, ஏனையச் சிற்றுயிர்களையும் சிவ நினைப்புடன் ஒப்பப் பேணுவர். அதுவே இறை பணியாகும்.

**முதற் கிழங்காய் முளையாய் அம்முளைப்பின்**
**அதற் புதலாய் பலமாய் நின்றளிக்கும்**
**அதற் கதுவாய் இன்பமாவது போல**
**அதற்கு அதுவாய் நிற்கும் ஆதிப் பிரானே. (473)**

கிழங்கு என்பது ஒரேவிதமான பொருள் பல சேர்ந்து ஒரு உருவமாவது. அப்படி முதற்கிழங்கு வித்து எனப்படும். நமக்கு நாம் அப்படி ஆகவேண்டும். இப்படி ஆகவேண்டும் என்ற எண்ணமே வித்து. பின் அதற்கு தேவையானதை சேர்த்து ஒரு உருவத்துக்கு கொண்டு வரும்போது பூரணம் என்கிறோம். அந்த எண்ணம் முளைத்து அது திருப்பித் திருப்பி நினைத்தால் அது திண்ணமாகிறது. அதுவே அதற்புதலாய் - பலமாய் - வளர்ச்சியில் செடியாய் அரும்பு மலர் காய் கனி முதலிய பயனாய் நின்றளிக்கும் - நிலைத்து - பிற உயிர்களுக்கு தான் பயன்படுவதே இன்பமாகக் கொண்டு வாழ சிவன் அருள் புரிவான். சிறு துரும்பும் பல் குத்த உதவும்.

**பரத்திற் கரைந்து பதிந்த நற்காயம்**
**உருத் தரித்து இவ்வுடல் ஓங்கிட வேண்டித்**
**திரைகடல் உப்புத் திரண்டது போலத்**
**திரித்துப் பிறக்கும் திருவருளாலே. (474)**

திருவருளால் பதினைந்து கூட்டுப் பொருள்களால் விளங்கும் பருஉடல் உணவில் காரியமாகும். அது கடலில் உப்புத் திரண்டு திரண்டு உருவம் ஆனது போல நாம் உட் கொள்ளும் ஐந்து விதமான ஆகாரம் ஐந்து விதமான உடம்பாகி

உடம்பை உடம்பு தழுவி ஒன்றாகத் தோற்றம் அளிக்கிறது. எப்படி உப்பு நீர் பட்டால் மறுபடியும் நீரோடு கலப்பதுபோல இந்த உடம்பும் பரத்தில் கரைந்துவிடும். ஆகையால் இதை நிலையானது என்று நம்பி ஏமாற வேண்டாம். ஒருநாள் இது போயே தீரும். ஆகையால் இருக்கும்வரை நம்மால் முடிந்த அளவு பிறருக்கு உபகாரமாக இருப்போமாக.

## 15. மூவகை சீவ வர்க்கம்

**சத்தி சிவன் விளையாட்டில் உயிராக்கி**
**ஒத்த இரு மாயா கூட்டத்திடை பூட்டிச்**
**சுத்தம தாகும் துரியம் பிரிவித்துச்**
**சித்தம் புகுந்து சிவமய மாக்குமே. (475)**

ஆற்றலும் அன்புமே சத்தி சிவமெனப்படுகிறது. அதாவது சத்தி சிவம் தோன்றும் முன்னே அறியாமை இருள் எங்கும் பரந்து கிடந்தது. யாதொரு பயனும் இல்லாமல் வீணாகிக் கிடந்தன. இவைகளுக்கு உணர்வு கொடுத்து உய்வித்து உயர்த்துவது என்ற எண்ணமே அன்பு என்பது. அது சிவமாகவும் அது செயல்பட ஆற்றலாகிய சத்தியும் இணைந்து உதவலாயிற்று. அதுவே அருள். இதனால் அறிவு உதயமாகி எல்லாம் சிவ மயமாக மாறியது. இதற்கு ஐந்து தொழில்கள் அவசியமாயின. இத்திருக்குறிப்பே விளையாட்டு எனப்பட்டது. உடலை படைத்து உயிரை அதனுடன் இணைத்து அழுக்கு அகற்றத் துணைபுரியும் தன்மையிலும் அகற்ற வேண்டிய தன்மையிலும் ஒத்த பான்மை யுடையன இரு மாயைகள். அவை சுத்த மாயை, அசுத்த மாயை எனப்படும். இரு மாயையும் சேர்ந்ததே முப்பத்தாறு தத்துவங்களும். அவற்றுள் முப்பத்தொன்று அசுத்த மாயை. ஐந்து சுத்த மாயை. இவை உருவுடல், அருவுடல், பருவுடல், கருவுடல், என நால்வகைப்படும். துரிய நிலையில் மலமகற்றி சித்தத்தில் சிவன் புகுந்து அருள் உள்புகுந்து அவ்வுயிரைத் தன் வண்ணம் ஆக்கி அருளினன்.

**விஞ்ஞானர் நால்வரும் மெய்ப் பிரளயாக் கலத்தவர்**
**அஞ்ஞானர் மூவரும் தாங்கும் சகலத்தின்**
**அஞ்ஞானர் மூவருமாகும் - பதின்மராம்**
**விஞ்ஞானர் ஆதியர் வேற்றுமை தானே. (476)**

இம்மந்திரம் ஒரு மலமுடையார் நால்வகையினர் இரு மலமுடையினர் மூவகையினர், அஞ்ஞானம் மூவருமாக பதின்மர் - பத்துவகை ஜீவவர்க்கம் ஒரு மலமுடையார் விஞ்ஞான கலர். இரு மலமுடையார் பிரளயாகலர். அஞ்ஞான கலர் மூன்று மலம் உடையவர்கள் சகலர். இதை நாம் நடைமுறையில் வேதியர்

(பிராமணர், க்ஷத்திரியர், சூத்திரர் என்கிறோம். அதாவது உடலை 'நான்' என்று கருதி வாழ்பவர் சூத்திரர் மனதை நான் என்று கருதி வாழ்பவர் பிரளயா கலர் (க்ஷத்திரியர்) அந்தகி கரணத்தை 'நான்' என்று கருதி வாழ்பவர் வேதியர். இந்த மூன்றையும் கடந்தவர் பிராமணர். இவர்களுக்கு கர்மமே கிடையாது. அதையும் கடந்தவர் தேவர்கள்.. மேல்நிலை தெய்வம்.

**விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்**
**தஞ்ஞானர் அட்ட வித்தேசராம் சார்ந்துள்ளோர்**
**எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர்**
**மெய் ஞானர் ஆணவம் விட்டு நின்றாரே. (477)**

கேவலத்து ஆராது விட்டவர் - மும்மலத்து அழுந்தாத முதன்மை மலம் ஆணவம் மட்டும் உள்ளவர். முதன்மை - அதிகாரம்) விஞ்ஞானர் - முழுச் செம்மை வாய்க்கப் பெறாதவர். ஆவி அருளோன் - அணு சதாசிவர். இவர்கள் அருளோன் மெய்க்கண் உறைபவர் (அருளோன் மெய் - சதாசிவ தத்துவம்) அறிவுக் கடவுளர் என்பர் - அட்ட வித்தேசுவரர். இவ்வெண் மரும் ஆண்டான் மெய் உறைபவர் (ஆண்டான் மெய் - மகேசுவர தத்துவம்) எஞ்ஞான் நாயகர் - எண்மை ஞானத்தராய செவ்வியர் எழுகோடி மந்திரத் தலைவர். இவர்கள் ஆசான் மெய்யின்கண் உறைபவர். இம்மூவரும் பூரண அறிவை அடையாதவர். (ஆசான் மெய் - சுத்த வித்யா தத்துவம்) மெய்ஞானர் - முழு அறிவு பெற்றவர். இவர்கள் சிவன் பேறு பெற்ற சிவனடியார்கள். இந்நால்வரும் அறிவில் சீலம், அறிவில் நோன்பு, அறிவில் செறிவு, அறிவில் அறிவு எனும் நாலு நெறி பேறு பெற்றவர்.

**இரண்டாவதில் முத்தி எய்துவர் அத்தனை**
**இரண்டாவது உள்ளே இருமல பெத்தர்**
**இரண்டாரு நூற்றெட்டு ருத்திரர் என்பர்**
**முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே. (478)**

ஒரு மலமுடைய மூவகையினரும் மற்றோர் படைப்புக்குப் பின் திருவடிக்கீழ் வீடு பேறு எய்துவர். இரண்டாம் - பெத்தர் - இரு மலமுடையார் இருவகையினர். நிறைவு பெற்றவர், குறையுள்ளவர் எனும் இருவகை. முழுமையான சுத்தம் உள்ளவர், சுத்தத்துக்கு வழி கோலுபவர் எனலாம். பக்குவர், அபக்குவர், பரமுத்தி, அபரமுத்தி எனவும் சொல்லலாம். எல்லாக் கட்டும் உடையவர் மும்மலத்தார்.

**பெத்தத்த சித்தொடு பேண் முத்தச் சித்து அது**
**ஒத்திட்டு இரண்டிடை ஊடுற்றார் சித்துமாய்**
**மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்**
**சத்தத்து அமிழ்ந்து சகலத்து ளாரே. (479)**

முதன்மை மலப்பசை அறிவொடு தங்கிய ஒரு மலமுடையார் விழுமிய முழுமுதல் சிவனேயாவர். சித்து: அதுமுதல் பொருள் ஈறு பகுதிப் பொருள் விடுதி. ஒத்திச் . . . சித்துமாய் - இருமலப் பிணிப்பினர். மெய்யுணர்வினராய், செம்மையில் குறை உடையவராய், மத்தது . . மாட்டாதார் - மருளுடையவரால் மும்மலத்தை அடக்கும் வலி இல்லாதாராய், சத்தத்துளாரே . . . அருள் உடலோடு உறைந்து மும்மல கட்டுடையார். மத்தத்து - உன்மத்தத்து, மருள் - தலைக்குறை சப்தம் - ஓசை. இஃது அரு உடலைக் குறிக்கும்.

**சிவமாகி ஐவகைத் திண்மலம் செற்றோர்**
**அவமாகார் சித்தர் முத்தாந்தத்து வாழ்வார்**
**பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்**
**நவமான தத்துவம் நாடிக் கண்டோரே. (480)**

சித்தர் - நிறை உள்ளம் - இறை விளங்கும் உள்ளத்தார். முத்தாந்தம் - விருப்பேறு சுத்த வெளி - சாயுஜ்ஜியம், பவம் - பிறப்பு. நவமாகிய தத்துவம் - ஓம் என்ற ஒன்பது மெய். அவை - அறிவு (அத்தன்), ஆற்றல் - அன்னை நுண்ணோசை (நாதம்), நினைவோசை (விந்து) அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன், ஐவகை மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி.

**விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்**
**விஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்**
**அஞ்ஞானர் அச்சகலத்தர் சகலராம்**
**விஞ்ஞானர் ஆதிகள் ஒன்பான் வேறு உயிர்களே. (481)**

மலப்பசை ஒன்று மட்டும் பொருந்துவோர் மெய் உணர்வினராவர். அவர் மூவகையினர் (ஆவி அருளோன், அறிவுக் கடவுளோர் என்மர், எழு கோடி மந்திரத் தலைவர். விஞ்ஞான . . . இருமலர் - தூமாயையில் தங்கும் இருமலத்தாரும் மூவகையினர் (குறை செல்லி உடையவர், விழுப்பேற்றினர்,) அஞ்ஞான - சகலராம் - அசுத்த மாயையில் உள்ள மூவகையினர் (மட்டமானவர், மந்தர், விரைவானவர் - தீவிரம், மிக விரைவினர் - தீவிரத்தார்) விஞ்ஞான உயிர்களிலே மேலே கூறிய மூவகை ஒன்பது பிரிவான உயிர்கள்.

**விஞ்ஞான கன்மத்தால் மெய்யகம் கூடிய**
**அஞ்ஞான கன்மத்தினால் சுவர் யோனி புக்கு**
**எஞ்ஞான மெய் தீண்டியே இடைஇட்டுப் போய்**
**மெய் ஞானராகிச் சிவமேவல் உண்மையே. (482)**

விண்ஞான கன்மத்தர் - மேலான ஞான கன்மத்தை புரிபவர். அஞ்ஞான கன்மத்தினால் - அந்த ஞான கன்மம் புரிவதாலே - சுவர் யோனி - தேவப் பிறவிக்குரிய யோனியில்

புக்கு. எஞ்ஞானம் மேல் எழும்ஞானம், எவவுதல் - மேல் எழுதல், மெய்யுணர்வு. கைவந்த தவத்தோர் அறிவு நிலையினராய் சிவன் திருவடியைக் கூடுதல் மெய்மையே.

**ஆணவந்துற்ற அவித்து ஆம் நனவு உற்றோர்**
**காணிய விந்துவாம் நாத சகலாதி**
**ஆணவம் ஆதி அடைந்தோர் அவரன்றே**
**சேணுயர் சத்தி சிவ தத்துவமாமே. (483)**

ஆணவத்தால் பொருந்திய மறைப்பு - இது நாம் உடலை நான் என்று நினைப்பதால் (நினைப்புதான், உண்மை அல்ல) எவ்வளவு இழக்கிறோம் என்பதை சிந்தித்தால் கொடுமை தெரியும். ஐந்து விரலால் ஆன கையை வைத்து சூரியனை மறைத்து விடலாம். நஷ்டம் யாருக்கு? அதுபோல் உடலை நான் என்று நினைப்பதால் எவ்வளவு அறிவை இழக்கிறோம். கற்றது கை அளவு, கல்லாதது உலகளவு. அந்த மறைப்பு விழிப்பு நிலை இல்லாதவரை ஒக்கும். நனவில்லாதவர். கண் இருந்தும் குருடர். திருதராஷ்டிரர் நூறு பிள்ளை பெற்று என்ன பயன். ஐந்து பேருக்கு இணை இல்லையே. அதனால் அதற்கு முந்திய நிலை விந்து, நாதம், ஆணவம், ஆதியை அடைந்து அதற்கு மேல் சிந்திக்க வைத்தது இயற்கை. எல்லாவற்றுக்கும் மேலாக அன்னை மெய்யும் அத்தன் மெய்யும் உண்டு அவித்தாம் நனவு - பண்பட்ட அறிவு. மண்ணில் கலந்தவர் போல் மனிதர்கள் எண்ணில் கலந்து இறைவனை எண்ணார் முன்னீர் குளத்தில் முகத்தை ஒருபால் வைத்து தென்னீர் படுத்த சிவன் அவனாமே.

ஆக மனித உருவத்திலேயே தெய்வம், தேவர், அசுரர், மனிதர், மிருகம், தாவரம் ஒவ்வொன்றிலும் பல பிரிவுகளுடன் கூடி உண்டு என விளங்குகிறது. அதனால்தான் மனிதர்கள் தோற்றத்தில் ஒன்றுபோல் தெரிந்தாலும் உள்ளத்தால் ஆடுகள், மாடுகள், குரங்கு, யானை, புலி, சிங்கம், பாம்பு, முதலை, கிளி, காகம் இன்னும் பல் விருகங்கள், மரம் போல் இருக் கிறார்கள் என்பதை காட்டத்தான் புராண இதிகாசங்களில் மனித உருவில் தலையை வேறாக வைத்துக் காட்டினார்கள். மனித உள்ளங்களை அறியும் கண்ணாடி நம்மிடம் உண்டானால் (அதுதான் அறிவுக் கண்) நாம் அறியலாம். இதை வைத்துதான் கண்டதெல்லாம் பொய், கேட்டதெல்லாம் வீண் என்பது நம் முன்னோர் வழிமொழி. இதை ஆராய்ச்சி உடையோரே அறிய முடியும். உலக நடவடிக்கைகள் எல்லாமே பொய் - போலித் தனம்.

ஐக்கிய நாடுகள் சபை. அங்கே உண்மை உண்டா. ஐம் பெரும் நாடுகளில் ஒருவர் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் (Veto

power) எந்தத் தீர்மானமும் நிறைவேறாது. இதற்கு எதற்கு ஐயா இந்த சபை. கோடிக்கணக்கில் செலவு செய்து உலகில் சமாதானம் நிலவுகிறதா? எந்த நாட்டில் யுத்தம் இல்லை. இதேபோல நம் நாட்டில் ஜனநாயகம் என்கிறோம். எல்லோரும் இந்நாட்டு மன்னர். ஜனங்களுடைய ஆட்சியாம். நூற்றுக்கு எண்பதுபேர் வறுமை கோட்டுக்குக்கீழ் செய்தித்தாளை எடுத்தால், ஜாதிச் சண்டை, சமயச் சண்டை, கொலை, கற்பழிப்பு வெகுசில என்றாலும் பாதுகாப்பு இல்லாதபோது நிம்மதி ஏது?

இதையெல்லாம் ஆராய்ந்த நம் முன்னோர் ஒரே முடிவுக்கு வந்தனர். அதாவது உருவத்தால் பிறக்கவே கூடாது அது ஏற்றத்தாழ்வு மற்றும் வேறுபாட்டு உணர்ச்சிகளுக்கு காரண மாகிறது. இதை ஒழித்து கட்ட முடியுமா. இதற்கு காரணம் என்ன என்று ஆராய்ந்தனர். முடிவும் கண்டனர். ஆசையே காரணம் ஆசை என்றால் என்ன? சமநிலையில் இருக்கும்போது, நிலையிலிருந்து தன்னை தனியே பிரித்து உயர்ந்தவனாகக் காட்டிக் கொள்வதே பிரிவினை. இந்த ஆசை அறியாமையி லிருந்து தோன்றியது. அறியாமை என்றால் என்ன? நாம் அப்படி தனித்து வாழ இயலாது என்பதுதான் அறியாமை.

வெளியே பிற பொருள்களை ஆராய்ச்சி செய்வதைவிட தன்னைப் பற்றி ஆராயும் சிந்தனையே போதும். அதைப் பயன்படுத்தி ஆராய்ந்தனர்.

ஞானத்தின் நன்னெறி 'நான்' யார் என்ற கேள்வி கேட்டு பதில் கண்டார்கள். அப்படி கண்ட அறிவுதான் - அறியும் அறிவு தான் கடவுள் நிலை என்றனர். அதாவது நமக்கு வேறாகத் தெரிவதை எல்லாம் நான் இல்லை நான் இல்லை என்று நீக்கி நீக்கிப் பார்க்க 'நான்' எது என்று கண்டு கொண்டார்கள்.

அந்த உண்மை என்ன தெரியுமா? சுத்த வெளி.

இந்த கரு உற்பத்தி முப்பத்து ஒன்பது பாட்டும் படித்த பின்னும் பிறவியை விரும்பினால் என்ன சொல்வது? இன்னும் பைத்தியம் தெளியவில்லை என்பதே பொருள்.

இனி இரண்டாவது தந்திரத்தில் நாற்பத்தாறு மந்திரங்கள் உண்டு. அதையும் தொடருவோம்.

## 16. பாத்திரம்

**தில மத்தினையே சிவஞானிக்கு ஈந்தால்**
**பல முத்தி சித்தி பரபோகமும் தரும்**
**நில மத்தனை பொன்னை நின் மூடர்க்கு ஈந்தால்**
**பலமும் மற்றே பர போகமும் குன்றுமே. (484)**

இது வெளியே செய்யும் தர்மத்தையோ, பாத்திரத்தையோ குறிப்பிடவில்லை என்பதை கவனிக்கவும். திலமத்தினை என்கிறார் திலகமிடும் இடம் நெற்றி. நம் உள்ளேயே மண், பொன் பாத்திரம் உண்டு. அறிவுதான் பொன் எனப்படும். காஞ்சனம் கற்பகம் என்பது நம் கண்மணியையே. சரணக் கமல ஆலயத்தில் அரை நிமிட நேரம் என்றார். ஒரு சான்றோர் அகமுகத் தரிசனத்தையே இது குறிப்பிடும். இது அல்லாமல் உடலுக்காக செய்யும் காரியம். அத்தனையும் சாவில்தான் போய்முமுடியும். உடலை மற. அறிவைப் பேணு.

**கண்டிருந்தார் உயிர் உண்டிடும் காலனைக்**
**கொண்டிருந்தார் ஆருயிர் கொள்ளும் குணத்தனை**
**நன்று உணர்ந்தார்க்கு அருள் செய்யும் நாதனைச்**
**சென்று உணர்ந்தார் சிலர் தேவரு மாமே. (485)**

உயிரைத் துன்புறுத்திக் கொண்டு செல்லும் கூற்றுவனை உலகோர் யாவரும் அறிவர். தன்னை வழிபட்டவரை சிவன் (சித்துடன் சேரிடில் செத்தார் இருந்தார்) காலனிடம் இருந்து காப்பாற்றுகிறான். ஆனால் உயிர் இருக்கும்போதே அவன் திருவடியை உணர்ந்தவராக இருக்கவேண்டும். உலகியலில் புகழும் பணமும் சேர்ப்பவருக்கு வாய்ப்பே கிடையாது. தன்னையே அவனிடம் அர்ப்பணித்த பயிற்சி பெற்றிருக்க வேண்டும். உயிர் உடலை விடும்போது அவனை நினைக்க வேண்டும்.

**கை விட்டிலேன் கருவாகிய காலத்து**
**மெய் விட்டிலேன் விகிர்தன் அடி தேடுவன்**
**பொய் விட்டு நானே புரிசடை யானடி**
**நெய் விட்டிலாத இடிஞ்சலு மாமே. (486)**

பல ஜன்மங்களில் அடிபட்டு, சிவநெறியை நாடும். அப்படி நாட்டமே கடைசி ஜன்மம் என்பதன் அறிகுறி. அது இளமை யிலேயே தெரியும். வயதிற்கு மேல் அறிவு வளர்ச்சி காணும். அதுவும் ஆன்மீக அறிவு. அப்படிக் குழந்தைகள் கருவிலேயே திருவை உணர்ந்தவர். அப்படி இருந்தும் உடம்பினிடத்து யான் எனது என்ற பற்றை விட்டிலேன். விகிர்தன் - பல்வேறு உருக்கொள்ளும் சிவன். பொய் விட்டு - உள் ஒன்று வைத்து புறம்மொன்று செயல் செய்வது பொய்ச் செயல். புலன் வழிச் செயல் எல்லாம் பொய்யே. அதைத்தான் பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம் என்றார். இடிஞ்சில் - அகல் விளக்கு அதில் எண் - நெய் இல்லையெனின் எப்படி எரியும். சிவனை நினைத்தலே நெய். விளக்கில் நெய்யிட்டு தூண்டவும் உள்ளமே விளக்காக, ஆர்வமே நெய்யாக, மனமே திரியாக, மனத்து விளக்கினை மாண்பட ஏற்றுமின் அது ஒளிமயமாகும். ஊனினை உருக்கி உள் ஒளி பெருக்கவும்.

**ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர் நந்தி காட்டித்து கண்டவன்
ஏவன செய்யும் இளம் கிளையோனே. (487)**

பாத்திரம் என்றாலே நல்ல சீடர்களையே குறிப்பிடும். கரு உற்பத்தியாகும்போதே இன்னின்ன இப்போது நடக்க வேண்டும் என்பது கால அட்டவணை போட்டே அனுப்பப் படுகிறது. ஆன்மீக ஆலமரத்தில் உயிர்கள் எல்லாமே கிளைகள் போலவே. அதனால் என் கடன் பணி செய்து கிடப்பதே. ஆக்ஞா சக்கரமே நம்மிடம் ஆணையர்.

## 17. அபாத்திரம்

**கோல வறட்டைக் குனிந்து குளகிட்டு
பாலைக் கறந்து பருகுவதே யொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்க்கு ஈந்தது
காலம் கழிந்த பயிரது ஆகுமே. (488)**

தகுதி இலாதவர்க்கு ஈவது வறட்டுப் பசுவை தழை இட்டு வளர்த்து பால் கறந்து குடிப்பதை ஒத்தது. இங்கே பசு என்பது ஆன்மா. தகுதியில்லாத சீடன் - வறட்டுப் பசு. பால் என்பது ஒளி - அறிவு. அறிவற்றவர்க்கு அறிவிக்க வேண்டாம். அறிவில் செறிந்தவருக்கும் அறிவிக்க வேண்டாம். அறிவு அறியாமை உற்றோருக்கு அறிவிக்க அவர்கள் அறிவால் உணர்வார்கள். சீலம் - சரியை, நோன்பு - கிரியை, விசாரம் இல்லாதவர்களிடம் அறிவிப்பானேன்?

**ஈவது யோக இயம நியமங்கள்
சார்வது அறிந்து அன்புதங்கு அவர்கன்றி
ஆவது அறிந்தன்பு தங்காதவர்களுக்கு
ஈவ பெரும் பிழை என்று கொளீரே. (489)**

யோக உறுப்பு எட்டில் முதல் இரண்டு இயமம் நியமம். இது இல்லாதவருக்கு சார்வதற்குரியன என்று அறிந்து அவற்றை அன்புடன் கைக்கொள்ள வருவோர்க்கு ஈவது தக்கது ஆகும். யோகம் - மன ஒழுக்கம், இயமம் - தீமை அகற்றல், நியமம் - நன்மை, ஆற்றல் அன்பு நெறியை கடைப்பிடிக்காதவர்க்கு ஆன்ம அறிவை கொடுப்பது பெரும் குற்றமாகும்.

**ஆமாறு அறியான் அதி பஞ்ச பாதகன்
தோமாறும் ஈசர்க்கும் தூய குரவற்கும்
காமாதி விட்டோர்க்கும் தரல் தந்து கற்பிப்போன்
போமா நரகில் புகான் போதம் கற்கவே. (490)**

பஞ்ச பாதகன் - பொய், கொலை, களவு, காமம், பொருள்,

நசை ஆகிய ஐந்து பாவமும் அஞ்சாது நெஞ்சார்ச் செய்பவன். தோமாறும் - ஆணவ மலத்தை மாற்றும். குரவன் - குரு, ஆசான், காமாதி - காமம், வெகுளி, மயக்கம், விட்டோர் - தவத்தோர், தரல் - தர வேண்டிய நற்பொருள்கள் தந்து - அன்புடன் அளித்து கற்பிப்போன். தன்னையும், பிறரையும் அவ்வழி நிறுத்துவோன். போதம் - திருவடி உணர்வு. கற்க - ஏற்றுக்கொள்க.

**மண்மலை அத்தனை ஆதனம் ஈயினும்**
**அண்ணல் இவனென்றே அஞ்சலி அத்தனாய்**
**எண்ணி இறைஞ்சாதர்க்கு ஈந்த இருவரும்**
**நண்ணுவர் எழா நரகக் குழியிலே. (491)**

உண்மை உணர்வுடன் இரவலர் இறைவர் திருவடியைத் தொழாராயின் மண்ணும் மலையும் அவருக்கு ஈந்தவர் ஏற்றவர் இருவரும் கரும் நாகக் குழி வீழ்வர். இரவலரும் புரவலரும் இறைவணக்கம் உடையவராய் தங்களை ஆண்டவனுக்கு அடிமை என்றும் தங்கள் பாலுள்ள அறிவுச் செல்வங்களை அவன் உடைமை என்றும் அருளால் உளங்கொண்டு ஒருவருக்கொருவர் ஈந்தும் ஏற்றும் உதவியாய் வாழ்வதே திருநெறி என்பது பெறப்படும்.

## 18. தீர்த்தம்

**உள்ளத்து உள்ளே உள பல தீர்த்தங்கள்**
**மெள்ளக் குடைந்து நின்று ஆடார் வினைகெட**
**பள்ளமும் மேடும் பரந்து திரிவரே**
**கள்ள மனமுடை கல்வியி லாரே. (492)**

உண்மையான 'நான்' எது என்று தெரியாதவர்கள் எல்லோரும் கள்ள மனமுடையவரே. நான் என்பதை நுண்ணு ணர்வாக உணர்ந்தவருக்கு நம் உடலுக்குள் எல்லாமே உண்டு என்பது விளங்கும். நாம் பிறக்கும்போதே நம் தேவை எல்லாம் உள்ளேயே உள. வெளியே தேடுவது வீண் முயற்சி. கல்வி என்பது சாகாம லிருக்கப் படிப்பது. நாம் சாகவே படிக்கிறோம்.

**தளி அறிவாளர்க்கு தண்ணிதாய்த் தோன்றும்**
**குளி அறிவார்க்கு கூடவும் ஒண்ணான்**
**வளி அறிவாளர்க்கு வாய்ப்பினும் வாய்க்கும்**
**தெளி அறிவாளர் சிந்தையே உளானே. (493)**

தண்ணிது - குளிர்ந்தது - இன்பம். ஒண்ணான் - பொருந்த மாட்டான். குளி - உலக அறிவு உள்ளவர். பர அறிவை அடையமுடியாது. வளி - காற்று. காற்றை சுவாச கதியை கவனிப்பவர்கள் ஒருவேளை ஆகாயத்தைத் தொடும் வாய்ப்பு உண்டு. அதுவும் பயிற்சி பண்ணினால். சிந்தை தெளிந்தவருக்கு

சிவனை அடையமுடியும். குழப்பங்கள் நீங்கி அறிவே துணை என்று கொண்டு பேரறிவை அடைமின்.

**உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்**
**கள்ளத்தினால் பாரும் கலந்து அறிவார் இல்லை**
**வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்**
**பள்ளத்தில் இட்டதோர் பந்தருள் உன்னாலே. (494)**

அன்பு உடலாகிய பள்ளத்தில் பந்தலிட்டு சிவபெருமான் இருக்கிறான். நாதர்முடி மேலிருக்கும் ஐந்து தலை நாகப் பந்தலில். உணர்வுக்கு உணர்வாய் உணரப்படும் ஒப்பில்லா ஒருவனை - தீநெறிக்கண் செல்வார் யாரும் கலந்து நிற்கும் சிவனை அறியமாட்டார். அவர் தீவினை எஞ்சு வினையாகி வெள்ளம் போல் கூடிவிடும்.

**அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானை**
**செறிவார் உறை பதம் சென்றுவலம் கொள்**
**மறியார் வனைக்கை வருபுனல் கங்கைப்**
**பொறியார் புனல்மூழ்க புண்ணிய ராமே. (495)**

எல்லோருக்கும் எல்லாம் தெரியும் என்பதுதான் என் வாதம். அமரர்கள் என்றால் யாரோ எங்கேயோ இருந்து வருபவர்கள் அல்ல. அமைதியாக இருப்பவர்கள் யாவருமே அமரர்தாம். எதற்கும் பரபரப்பு இல்லாமல், படபடவென்று செயல்படாமல், நிதானமாக செய்யும் காரியம் காரணம் தெரிந்து அதன் முடிவு, பயன் தெரிந்து செயல்பட்டால் வெற்றி நிச்சயம். அவர்கள் ஆதியை உணரலாம். அப்படி அறிந்தவர்கள் செறிவார், அறிந்து செயல் செய்பவர் செறிவார். அவர்கள் பதம் ஆனவர்கள். பக்குவர். வலிமை ஆனவர்கள். அடியார்கள் பொருட்டு சிவன் வெளிப்பட்ட இடம் திருவூர் எனப்படும். வளைந்து வளைந்து வரும் நதி கங்கை. கண், கை வருபுனல் தானாக புகுந்த நீர் (நாசி வழியாக) கண்களில் உள்ள அனலில் ஆவியாகிறது. நாம் ஒன்றும் செய்யாமலேயே செயல்படுத்துவ்து யார்? அந்த ஆவியே நம்மிடம் வலிமை மிக்கது போல் உயிராக (சப்தத்துடன்) செயல் படுகிறது. அழுக்கினாலும் நெகிழ்வினாலும் மறிந்து வீழும் கங்கை என்னும் தீர்த்தம் (தீயினால் ஆவியாக்கப்பட்டது தீர்த்தம் - சுத்தம் செய்யப்பட்டது) அதில் நீர் ஆட என்ன புண்ணியம் செய்தனை? பொறியர் - சிறைபட்டுக் கிடக்கும் ஆன்மா. அதற்கு தானாக வந்து செயல்படும் சிவம்.

**கடலில் கெடுத்து குளத்தினிற் காண்டல்**
**உடலுற்றுத் தேடுவார் தம்மை ஒப்பாரிலர்**
**திடமுற்ற நந்தி திருவருளால் சென்று**
**உடல் புகுந்து அமைவது ஒன்றும் அறியாரே. (496)**

கடலில் இருப்பது அளவில் பெரிய நீர்த்தேக்கம் ஆனாலும்

உண்பதற்கு ஆகாது. பயனற்ற பணக்காரனிடம் இருக்கும் பணம் போல். அதைக் குளத்திற்கு நன்னீராகக் கொண்டு வருவது யார்? கடல் நீர் ஆவியாகி மேலே சென்று மேகமாகி, மழையாகப் பெய்து குளத்தில் தேங்கும் நிலை வரை செய்தது யார்? நந்தி. நம் கண்களுக்கு புலப்படாத செயல். நம்மிடமும் அப்படியே நடக்கிறது. நம் உடல் குளம் போன்ற கிணறு போன்ற பள்ளமே. இதுவெல்லாம் சிந்தித்தால்தான் சிவனிடம் அன்பு உண்டாகும். இயற்கையின் செயல் அருமை புரியும்.

**கலந்து அது நீரது உடம்பில் கறுக்கும்**
**கலந்து அது நீரது உடம்பில் சிவக்கும்**
**கலந்து அது நீரது உடம்பில் வெளுக்கும்**
**கலந்த அது நீர், நிலம், காற்றது வாமே. (497)**

அப்படி நம் உள்புகும் பரிசுத்த ஆவி நீராகி காற்றுடன் சேர கறுப்பு நிறமாகும். நெருப்புடன் சேர செந்நிறமாகும். நீருடன் சேர வெண்மை நிறமாகும். இந்த மூன்று நிறமும் மண்ணுடல் சேர மஞ்சள் நிறமாகும். அதுதான் மங்களம். மூன்றும் முக்குணங்களாகும்.

## 19. திருக்கோயில்

திருந்திய ஆன்மாக்கள் கடைசியில் போய்ச்சேரும் இடம் கோயில். கோ என்றால் நாதம். அது இல்லாத இடம் கோயில். மௌனபீடம். சிலர் 'கோ' என்றால் தலைவன் அவன் தங்கு மிடம் என்பர். பொருள் ஒன்றே. மோன பர ஆனந்தம் அதுவே முடிவு நிலை. அந்தத் தெளிவை அடைய கொடுக்கப்பட்டதே உருவம். ஞானம் திருவுருவாய் - இச்சை, செயல், அறிவு இம்மூன்றும் ஞானத்தை அடைய உதவ வேண்டும். உருவத்தால் ஆன பயன் உத்தமனை காண்பது உடலால் அழியில் உயிரால் அழிவர் திடம் பட ஞானம் பெற்றாட்டார். அதனால் ஊன் உடம்பே ஆலயம் உள்ளம் பெரும் கோயில். கோவில் ஆவது எது? குளங்கள் ஆவது எது? கோயில் உமக்குள்ளே, குளங்களும் உமக்குள்ளே.

**தாவர லிங்கம் பறித்தொன்று தாபித்தால்**
**ஆவதன் முன்னே அரசு கெடும்**
**சாவதன் முன்னே பெருநோய் அழுத்திடும்**
**காவலன் பேர் நந்தி கட்டு ரைத்தானே. (498)**

தாவர லிங்கம் என்பது கல்லால், கட்டையால் செய்யப் பட்ட லிங்கம். இவைகளை கடவுளாக்கி கோயில்கள் கட்டினால், கட்ட அனுமதித்த அரசு அந்தக் கோயில் கட்டி முடிக்கும் முன்னே வீழ்ச்சியுறும். அதைச் செய்தவன் குஷ்டரோகியாகி

சாவான் என்கிறார் திருமூலர். உருவம் கோயில் எல்லாம் கடவுளை கிண்டல் செய்வதுபோல, சிறுபிள்ளை விளையாட்டு.

**கட்டுவித்தாற் மதிற்கல் ஒன்று வாங்கிடில்**
**வெட்டுவிக்கும் அபிடேகத்து அரசரை**
**முட்டுவிக்கும் முனி வேதிய ராயினும்**
**வெட்டு வித்தே விடும் விண்ணவன் ஆணையே. (499)**

முதல் பாட்டுக்கும், இந்தப் பாட்டுக் கருத்துக்கும் வேறுபாடு தெரியும். கோயிலே கட்டக்கூடாது என்பது முதல் பாட்டு. இந்தப் பாட்டு கட்டின கோயிலை இடிக்கக் கூடாது என்பது போல் இருக்கிறது. ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். உதாரணமாக இன்று குடும்பக் கட்டுப்பாட்டுக்காக அரசாங்கம் பல கோடி செலவு செய்துகொண்டு வருகிறது. ஆனால் மற்றொரு பக்கம் பரிசோதனை குழாய் மூலம் (Test Tube Baby) குழந்தையைப் பெற்றுக்கொள்ள பல லட்சம் செலவு செய்பவரும் உண்டு. இது சனியனை விலைக்கு வாங்குவது போலாகும். சனி (Saturn) சாத்தான். அவன் சூரியன் பிள்ளை என்றாலும் சூரியனுக்கு எதிர். அவன் ஒளி, இவன் இருள். வளர்த்த கடா மார்பில் பாய்ந்தது போல். ஆனாலும் கடவுள் அதை அழிப்ப தில்லை. அடக்கில் அசேதனமாகும். அடக்கா அறிவை அறிந்தாக வேண்டும். இதை பார்த்தும் பார்க்காததுபோல் இருந்துவிட்டால் தானாகவே அழியும். அப்படி கோயில்கள், அரண்மனைகள் பாழகிப் போவதைநாம் பார்க்கத்தானே செய்கிறோம். அதுபோல் சொல்லிப்பார். சொல்வதை மதியாரை விட்டுவிடு. தானே தன் அழிவை தேடிக் கொள்வர் என்பதே இப்பாட்டின் கருத்து.

**ஆற்ற அரு நோய் மிக்கு அவனி மழையின்றிப்**
**போற்றரும் மன்னரும் போர் வலி முன்னுவர்**
**கூற்று தைத்தான் திருக்கோயில்கள் எல்லாம்**
**சாற்றிய பூசைகள் தப்பிலை த்தானே. (500)**

எதுவுமே இயற்கையாக இல்லாமல் - இயற்கை என்பது தானே தன் தேவை தெரிந்து பூர்த்தி செய்து கொள்வது. பிறரைச் சாராமல் வாழ்வது சுதந்திரம். அப்படி கோயில்கள் ஏதாவது உண்டா? மழை இல்லையென்றால் விளைச்சல் இல்லை. அது இல்லையெனில் உணவு இல்லை. உணவு இல்லை எனில் உயிர் இல்லை. இப்படி ஒன்று இல்லாவிட்டால் ஒன்று இல்லை என்றால் அது அடிமை வாழ்க்கை தானே. கடவுள் வாழ்க்கை என்பது இதையெல்லாம் கடந்த நிலை. அப்பாலுக்கு அப்பால் நிலை. அந்தக் கோயிலை நாடுங்கள். மழையை நம்பி வாழும் கோயில் அல்ல.

**முன்னவர் ஆனார் கோவில் பூசைகள் முட்டிடின்**
**மன்னர்க்கு தீங்குள வாரி வளம் குன்றும்**
**கன்னம் களவு மிகுந்திடும் காசினி**
**என் அரு நந்தி எடுத்து உரைத் தானே. (501)**

இந்த எட்டுத் தாதுப்பொருள்களையும் கடந்தவன் கடவுள். அவன் ஏழு ஏழாக எழுந்தருளி இருக்கும் இடம் இரண்டு. முகத்தில் ஏழு, உடலில் ஏழு இதை 14 உலகம் என்பர். அதற்கு முன் நிலை நாலு அந்தக்கரணம். மன்னர் என்பது அதுவே. மனம் அறிவு வருவது குறைந்தால் மனதும் நிலை பெறாது.

**பேர் கொண்ட பார்ப்பான் பிரான் தன்னை**
**அர்ச்சித்தால்**
**போர் கொண்ட வேந்தர்க்கு பொல்லா வியாதியாம்**
**பார் கொண்ட நாட்டுக்குப் பஞ்சமுமாம் என்றே**
**சீர் கொண்ட நந்தி தெரிந்து உரைத் தாரே. (502)**

பார்வை சத்தி இல்லாதவன் தன்னைப் பார்ப்பவன் என்று சொல்லலாமா. கண்தான் பார்க்கிறது என்று சொல்கிறோம். அது உண்மை அல்ல. அப்படி அது பார்க்கும் சக்தி உண்டானால் நல்ல இருட்டில் ஏன் கண் தெரிவதில்லை? ஒளி இல்லையெனில் கண் இருந்தும் பயனில்லை. அறிவு ஒளி இல்லையாயின் மனதால் பயனில்லை. கண்ணும் மனதும் இருந்தும் பயனில்லை. ஆகவே அறிவுதான் கண்ணை திறக்க வேண்டும். அப்படியானால் பிரதிபலிக்கும் மனம் 'நான்' இல்லை என்பதை ஒப்புக்கொண்டு அறிவுக்கு பணியவேண்டும். அறிவு என்பது பரந்த ஒளிமயம் - அருவம். ஒளிக்கு போர்வையாக அமைந்தது கண் இமைகள். இமைகளே இராம லட்சுமணர்கள் - விசுவாமித்திரர் யாகத்துக்கு காவல். ஒருவன் நிற்பான், ஒருவன் சுற்றிச் சுற்றி வருவான். ஒரு இமை ஆடும், மற்றொன்று ஆடாது. உள்இமை ஆடாது. இங்கே ஆடாதது சிவம். ஆடுவது சத்தி என்பது. இரண்டும் ஆடினால் அல்லது இரண்டும் ஆடாமல் இருந்தால் இயக்கமே கிடையாது. அதைத்தான் பஞ்சம் என்பது. பரந்த அஞ்சு. குறித்த இடத்தில் குவிந்து நிற்பது புத்தி. அதுவே நந்தி. அது மூல ஒளியை மறைக்கும். அது விலகி னால்தான் சிவதரிசனம் கிட்டும். சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் அது நாலாவது நிலை. இருப்பு உணர்வு.

## 20. அதோமுக தரிசனம்

அதோமுக தரிசனம் என்பது கீழ்நோக்கிய பார்வை என்பர். ஒரே ஒளிதான் பல கோணங்களில் திருப்பப்படுவது ஒளியின் செயல் அல்ல.

கண்ணாடியின் சுழற்சியே காரணம். அனுபவ உண்மை சூரியன் ஒரே இடத்தில்தான் நின்று சுழல்கிறது. ஆனால் அதன் ஒளி எட்டுத் திசையும் பதினாறு கோணமும் முட்டித் திரிகிறது. அதாவது சூழ்ஒளி சந்திரன். அந்த நிலவில் பல நிழல்கள் ஓடுகின்றன. அவை பஞ்சவர்ணம் ஆகும். அதைத்தான் செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்பது. விண்ணின்று இயங்கும் விரிகதிர் செல்வன். அது நம் கண் நின்று இயங்கும் உலவாப் பிராணன். இவை மண்ணின்று இயங்கும் வாய்வும் அதுவுமானது. ஆகவே அதோமுகம் என்பது ஆறாவது முகம். அது செவ்வாய். சிவப்பு நிறம் நெருப்பு. படைப்பின் நோக்கம் அசுரத் (அசுத்தம்) தேவர்களை சிறைப்பிடித்து வைத்துள்ளதை விடுதலை செய்ய வந்த சிவனின் அம்சம். ஐந்து முகத்தோடு அதோமுகமும் தந்து திருமுகங்கள் ஆறாகி, செந்தழல்கண் ஆறும் ஒரு முகமாய் தீப்பொறி ஆறு உய்ப்ப விரிபுவனம் எங்கும் பரக்க என்று முருகனின் தோற்றத்தை குறிப்பிடுவது.

**எம்பெருமான் இறைவா முறையோ என்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலி சொல்ல
அம்பவளமேனி அறுமுகன் போயவன்
தம்பகை கொல் என்ற தற்பரந் தானே. (503)**

ஐம்முக அருளோனும் அறுமுகப் பொருளோனும் ஒன்றே. ஆறு என்பது திகழ் உரு எண்ணிக்கையாலும் கூறலாம். இரண்டு காது, இரண்டு கண், நாசி, வாய், ஆக எல்லாம் ஒரே முகத்தில் தானே உள்ளது. அவ்விருவர் முகம் விழி, மலர்க்கை, மூன்றும் தனித்தனி முப்பது. ஏழு சப்தம், ஏழு ஒளி வர்ணம், பத்து காற்று, ஆறு ருஜி - 7 + 7 + 10 + 6 = 30 செந்தமிழ் பதினெட்டு மெய்யெழுத்து, பனிரெண்டு உயிர் எழுத்து. கூடினால் முப்பது. பெருக்கினால் 216. அதன் விரிவு 21,600 சுவாசம்.

**அண்டமொடு எண்டிசை தாங்கும் அதோமுகம்
கண்டம் கறுத்த கருத்தறிவார் இல்லை
உண்டது நஞ்சு என்று உரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோர்க்கே. (504)**

அண்டங்களோடு எட்டுத் திசையும் பரந்து தாங்கி நிற்கும் சக்தியை எண்ணாதே கண்டம் கறுத்தது. கறுத்தது என்றால் மறந்து போனது. ஏன் ஐந்தரை அடி உடலை நான் என்ற நினைப்பு அந்த மாபெரும் சக்திக்கு திரை ஆகிறது. சிவபெருமான் பால்கடல் வாசுகியால் கடையப்படும்போது வந்த விஷத்தைச் சாப்பிட்டார் என்பதெல்லாம் வெறும் கற்பனை கதைகள். இன்னும் சூரிய வெப்பத்தால் கடலில் உள்ள நீர் ஆவியாகி மேகம் ஆவதே - அதை ஆகாயம் ஆகாரமாகக் கொண்டு அதை ஓங்காரிப்பதே மழை. ஆகாயத்தின் கழிவு நாதம். நாதம் ஒளி, மழை எல்லாம் ஆகாயக் கழிவு. ஆகவே

புராண இதிகாசங்களை நேரடியாக உருவகப்படுத்தாமல் அணுவாக்கிப் பார்ப்பதே உள்ளீடு அதையும் பரமாக்கி பரந்த அஞ்சாக பார்ப்பது பிரபஞ்சம். அதை ஒலியாக்கி, ஒளியாக்கி, வெளியாக்கி சூனியமாவதே விடுதலை.

**செய்தான் அறியும் செழும் கடல் வட்டத்து**
**பொய்யே உரைத்துப் புகழும் மனிதர்கள்**
**மெய்யே உரைக்கில் விண்ணோர் தொழச் செய்வர்**
**மை தாழ்ந்து இலங்கு மிடறுடை யோனே. (505)**

பொருள் சேர் புகழுக்குரிய இறைமைக் குணம் இல்லாத வரை மயக்கத்தால் கடவுளாக்கி முறையின்றி புகழும் பொய் யுரை மனிதர்களை மெய் பொருளாகிய சிவனை வாழ்த்தினால் (மை - மேகம் போல் கருமை) அவனைச் சேவிக்க கற்றுக் கொண்டால் அவனை அடையலாம். நமது உடல் அவனுடைய இரக்கம். மேதை. சராசரம் அனைத்திலும் பள்ளிகொண்டு உள்ள அவன் இதனுள்ளும் பள்ளி கொண்டிருக்கிறான். உடலை நம்முடையதாக்கி அவனை புறக்கணித்திருக்கிறோம். ஆகையால் உள்ளிருந்தும் இல்லாதவன் போன்று மறைந்திருக்கின்றான். காயத்தை அவனுக்கு உகந்த பெரிய கோயிலாக்கி, பணிகள் எல்லாம் அவனுடைய பணிகளாக்கி அவனுக்கென்று வாழ்ந்திருந் தால் நமது மனம் பால்க் கடல் போல் பொலிவு பெறும். யாண்டும் பரமன் பள்ளி கொண்டிருப்பது ஆங்கு யோகானுபூதியில் விளங்கும். பிறகு பாரகமெல்லாம் பேரங்கமாகத் தோன்றும். பரமபதம் எனும் பெருநிலம் இதுவே. அனைத்தும் அவன் சொரூபம்.

**நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய**
**செந்தீ கலந்து உள் சிவன் என நிற்கும்**
**முந்தி கலந்து அங்கு உலகம் வலம் வரும்**
**அந்தி இறைவன் அதோ முகமாமே. (506)**

நந்தியாகிய சிவபெருமான் செந்தீயாக எழுந்து அருள்வன். அவனுடன் தொன்மையிலேயே வேறன்றி நிற்கும் திருவருள் ஆற்றல் நடப்பாற்றலாக நின்று உலகுயிர்களை வினைக்கு ஈடாக ஆட்டும். அதுவே வனப்பாற்றலாய் நின்று நடப்பாற்றலாய் உயிர்களை செம்மையாக்கி சிவத்துடன் கூட்டும். இதுவே லயமாகிய வெற்றியாகும். இத்திருமுகமே கீழ்நோக்கிய திருமுகம். அதோமுகம்.

**அதோமுகம் கீழண்டமான புராணன்**
**அதோமுகம் தன்னொடும் எங்கு முயலும்**
**சதோமுகத்து ஒண்மலர்க் கண்ணிப் பிரானும்**
**அதோமுகன் ஊழித் தலைவனு மாமே. (507)**

அதோமுகம் - சத் + ஓம் + முகம் சத்தாகிய பிரணவ

சுய ரூபமுகம்.

கீழ்நோக்கியமுகம் (நாசிக்கு நேரே அதோமுகம் 12 அங்குலம் நீ சித்தம் வைப்பீரேயாமாகில் மாசித்தி மாயோகம் வந்து தலைப் பெய்தும்) மெய்யாக உள்ள 'ஓம்' என்னும் வைப்பாற் றலில் மேல்முகம் ஒளிசேர் சுத்த மாயையாகிய விந்து. விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிட சந்தியிலாகி சமாதி ஆயிடும். கீழ்முகம் அசுத்த மாயையாகிய மோஹினி மான்.

**அதோ முகமாம் மலராயது கேளும்**
**அதோ முகத்தால் ஒருநூறாய் விரிந்து**
**அதோ முகமாகிய அந்தமில் சத்தி**
**அதோ முகமாகி அமர்ந்திருந் தானே. (508)**

கீழ்நோக்கிய திருமுகத்துடன் கூடி மாயா காரியங்களைத் திருவுள்ளத்தால் தொழில்படுத்தி அமர்ந்திருந்தனன் சிவன். அந்தமில் சத்தி - அளவில்லாத மாயையின் ஆற்றல்கள். (ஆறு கோடி மாயா சக்திகள்: செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மனம், மனானா வுவகை என்பன) அமர்ந்திருந்தான் - திருவுள்ளக் குறிப்பால் இயக்கி நின்றனன். அதோமுகம் - ஆதியாற்றல்.

ஆகாயத்துக்கு கீழ்நிலை. அதாவது உருவநிலை. ஆறில் விரிந்தனன் என்பது உருவநிலையில் கடைசி நிலை மனிதப் பிறவி. 18 நிலைகளில் ஒன்பதாவது நிலை. இதன் முடிவு 'ஓம்' என்ற ஒலி நிலைதான். அதற்கு அப்பால் மௌனநிலையே. ஏழு உம்பர் சென்றன. உணர்ந்து அமர்ந்தனன் எட்டே.

## 21. சிவ நிந்தை

மறைகள் நிந்தனை, சிவநிந்தனை பொறா மனமும், தறுகண் ஐம்புலன்களுக்கு சேவை செய்யுறா சதுரும், பிறவி தீதெனா பேதையர் தம்மொடு பிணக்கும், உறுதி நல்லறம் செய்வோர் தங்களொடு உறவும், ஓது நல் உபதேசம் செய்மலர் தீது செய்யினும் சிவச்செயல் எனும் தெளியும் ஏற்பட சிவன் அருள் செய்வானாகுக.

**தெளிவறு ஞானத்து சிந்தையின் உள்ளே**
**அளிவுறு வார் அமராவதி நாடி**
**எளியன் என்று ஈசனை நீசர் இகழில்**
**கிளியொன்று பூஞையில் கீழது வாகுமே. (509)**

அநேகர் ஆராய்ச்சிக்குப் பின்னும் சிந்தை தெளிந்த பின்னும் (ஒரு மலத்தார்) 'நான்' என்ற ஆணவம் அவர்களை விடுவ தில்லை. அவர்களை சேர்ந்தவர் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள் இவர்கள் சிவனின் எளிய வாழ்க்கையை அலட்சியப்

படுத்தி தகாத செயல்களில் தங்களுக்கு கைக்கூடி வந்த யோகப் பயிற்சியை பூனை கையில் கிடைத்த கிளி எப்படி பாழாக்கப் படுகிறதோ அப்படி நடவடிக்கை களில் இறங்கி விடுகிறார்கள். அப்படி ஆஸ்ரமங்கள், கோயில்கள் எல்லாம் இன்றும் பார்க்கி றோம். சிவன் பெயரால் நடக்கும் அட்டூழியங்கள், கொடுமை களையும் பார்க்கிறோம்.

**முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்**
**விளிந்தவர் மெய் நின்ற ஞானம் உணரார்**
**அளிந்த அமுதூறிய ஆதிப் பிரானைத்**
**தளிந்த வர்கல்லது தாங்க ஒண்ணாதே. (510)**

கன்மனமுடைய வானவர், தானவரெல்லாம் விழுப்பம் - தூய்மை பெறாமல் - யோகத்தால் வரும் சில சக்திகளை துஷ்பிரயோகம் செய்து சிவ கொள்கையையே எதிர்க்கிறார்கள். இத்தகையோர் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றார்கள். இதைத்தான் நான் விளம்பரம் உள்ள இடங்களை நெருங்காதீர்கள் என்று எச்சரிக்கை செய்து வருகிறேன். விளம் பரம், பணம், இரகசியம் என்று இருக்கும் இடங்களை நெருங்கா தீர்கள். இவர்களெல்லாம் கள்ள மனமுடையவர். சிறந்த திருவடி அமிழ்தை அருளும் சிவபெருமானை தளிர்கொண்டு, அதாவது தன்னை அடியவர்களாக சிவன் தலைமையை ஏற்று நடப்பவர் தளிர்ந்தவர். முளிந்தவர், வாடிய சரீரத்தை உடையவர். விளித் தவர் மீண்டும் பிறக்க இறந்தவர். அளிந்து - களிந்து, தளிர்ந் தவர் - அடங்கியவர்.

**அப்பகையாலே அசுரரும் தேவரும்**
**நற்பகை செய்து நடுவே முடிந்தனர்**
**எப்பகையாகிலும் எய்தார் இறைவனைப்**
**பொய்ப் பகை செய்யினும் ஒன்று பத்தாமோ. (511)**

அறியாமையால் விளையும் செருக்காகிய பகையால் அசுரரும் தேவரும் பகைவராய் பெரும் போர் செய்து மாண்டு அழிந்தனர். இறைவனை அகத்தில் வைத்து பூஜை செய்பவருக்கு எப்பகையும் வராது. விள்ளார், தன்னைப் பெரிதாக காட்டிக் கொள்ளமாட்டார். சிவனே - அன்பே தாண்டவம் ஆகும். காவலர் மேவலரை நீக்கி குடிகளை சமமாக பார்க்கும் அரசன்போல் எளிமையே இவர்கள் வாழ்க்கையாக இருக்கும். விளையாட்டாக கூட பொய்மை இவர்களிடம் வராது. எல்லோரையும் போல சகஜமாக இருப்பார். யாரும் எப்பொழுதும் பார்க்கலாம்.

**போகமும் மாதர் புலவி அது நினைந்து**
**ஆகமும் உள் கலந்து அங்குள் ஆதலால்**
**வேதியராயும் விகிர்தனாம் என்கின்ற**
**நீதியுள் ஈசன் நினைப் பொழி வாரே. (512)**

எங்கே பெண்களும், பணமும் மதிக்கப்படுகிறதோ அங்கே உண்மை இருக்க வாய்ப்பு கிடையாது. அந்த மாதிரி ஆஸ்ரமங்களை நாடவேண்டாம். மற்றும் அநேக ஆஸ்ரமங்கள் கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றி ஆஸ்பத்திரி கட்டுகிறேன், பள்ளிக்கூடம் வைக்கிறேன், கலைக்கூடம் நடத்துகிறேன் என்பார்கள். அது அதற்கு தனித்தனி கூட்டம் உண்டு. அது ஆன்மீகவாதிகள் வேலை இல்லை. இவர்கள் இறைத்தொண்டு தவிர வேறு எதிலும் ஈடுபடக்கூடாது. எளிய வாழ்க்கை, அடக்கம், பொறுமை இவைகளே இவர்கள் பொக்கிஷங்கள்.

இவர்களை சிவனே வெளிப்படுத்துவான். உண்மையை விரும்பும் பக்தர்களைக் கொண்டு வந்து சேர்ப்பான். இதை அனுபவத்தில் உணர்ந்தவன் அடியேன். ஆகையால் நம்பிக்கையே பிரதானம். விளம்பரம் அல்ல, விளம்பரத்துக்கு சூத்திரதாரி விநாயகர். அவரை நம்புங்கள்.

## 22. குரு நிந்தை

சிவன் குரு என்பது எல்லாம் தனிப்பட்ட மனிதர்களோ உருவங்களோ அல்ல. இவைகளெல்லாம் எங்கும் பரந்தே கிடக்கும். யாரும் இதை அடைய உரிமை உண்டு. உலகமே அன்பு மயம். உலகமே அறிவு மயம். ஆகவே நாம் படிக்க வேண்டியவை. இயற்கையிலேயே உண்டு அது பொது. எல்லோருக்கும் பொது. இந்தக் கருத்தில் பாருங்கள். கடவுள் தன்மை புரியும். ஆகவே அந்தப் பொது சுத்தமாக இருந்தால் தான் அதனால் உருவாகும் உருவங்களும் சுத்தமாக இருக்க முடியும்.

**பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்கள்**
**உற்றிருந் தாரை உளைவன சொல்லுவர்**
**கற்றிருந்தார் வழி உற்றிருந்தார் அவர்**
**பெற்றிருந் தார் அன்றி யார் பெறும் பேறே. (513)**

பெற்றிருந்தார் என்பதை உடலைப் பெற்ற பெற்றோர்கள் என்று கருதி பொருள் எழுதுகிறார்கள். அப்படிப் பார்த்தால் எல்லாப் பெற்றோரும் பெற்றோர்கள் என்று சொல்லவே தகுதி பெற்றவர்களாக இல்லை. ஆகவே எல்லோருக்கும் பொதுவான தந்தை தாயை விசாரித்து அறியவேண்டும். 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை', 'தாயின்றி சிறந்த கோயில் இல்லை' என்றால் இது உருவத்தால் ஆன தாய் தந்தையருக்கு பொருந்தி வராது. ஏனெனில் இவர்கள் நாம் இருக்கும் போதே இறந்து போகிற வர்கள். இவர்களை எப்படி என்க்கு துணைவரமுடியும். தன்னையே காப்பாற்றிக்கொள்ள முடியாதவர்கள் என்னை எப்படிக் காப்

பாற்ற முடியும்? அதற்காக வெறுத்துவிட வேண்டாம். இங்கே பெற்றோர் என்பது ஒளியும் ஒலியும். அவை என்றும் எங்கும் உள்ள அன்பும் ஆற்றலும் ஆகும். நம்மில் கண்களும் காதுகளும் - விண்ஞானம். அம்மை அப்பர் பாதம். இது உண்மையே. நினைவும், ஓசையும், விந்துவும், நாதமும். நாத, விந்து, கலை ஆதி நமோ நம. இந்த நான்கையும் பேணுதல் வேண்டும். அப்படி இருப்பவரை (உற்றிருந்தார் - உள் நோக்கிலேயே - அக நோக்கு) கேலி பேசுதல் தவறு. அப்படி அக நோக்கில் இருக்க கற்பதே கல்வி. அப்படி இருப்பது சுலபமானது அல்ல. அதைப் பெற்றுவிட்டால் வேறு என்ன வேண்டும்? சும்மா இருப்பதே சுகம். எல்லாம் இழந்த நலம்.

**ஓர் எழுத்து ஒரு பொருள் உணரக் கூறிய**
**சீர் எழுத்தாரை சிதையச் செப்பினோர்**
**ஊரிடைச் சுணங்களால் பிறந்து அங்கு ஓர்யுகம்**
**வாரிடைக் கிருமியாய் மாய்வர் மண்ணிலே. (514)**

அத்தகைய மகான்கள் மனம் வேதனை அடையச் செய்தவர்கள் நாய்களாகப் பிறப்பதொடு அல்லாமல் மண்ணில் ஒரு யுகத்துக்கு கிருமிகளாக வாழ நேரிடும் என்று எச்சரிக்கிறார் திருமூலர்.

**பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்**
**சித்தம் கலங்கச் சிதைவுகள் செய்தவர்**
**அத்தமும் ஆவியும் ஆண்டு ஒன்றில் மாண்டிடும்**
**சத்தியம் இது சதா நந்தி ஆணையே. (515)**

பத்தினி பத்தர்கள் என்றால் ஒருமுகப்பட்டவர்கள் என்பதே பொருள். ஒன்றையே நம்புபவர்கள். பத்தினி கொலையும் செய்வாள் என்று ஒரு பழமொழி. இதைப் பொருள் பண்ணத் தெரியாமல் விபரீதமாகப் பொருள் பண்ணுகிறோம். 'கொல்' என்றால் அழிப்பது அல்ல. ஒன்றை மற்றொன்றாக மாற்றுபவர் என்பதே சரியான பொருள். கெட்டவைகளை அழித்து நல்லதாக மாற்று பவர்கள் பத்தினி பத்தர்கள். அடுத்து தத்துவஞானிகள் - மெய்ப் பொருளை உணர்ந்தவர். கண்டதே காட்சி என்று கொள்ள மாட்டார்கள். உட்பூசனை செய்வர். இந்த மூவரும் சித்தம் தெளிந்தவர்கள். அந்த தெளிவு நிலையை சிதைப்பவர்கள் இயற்கையால் தண்டிக்கப் படுவார்கள். அவர்கள் மனம் நோகச் செய்தவர் ஒரே ஆண்டில் மடிவார்கள் என்று சபிக்கிறார் திருமூலர். இதையும் நான் அனுபவத்தில் கண்டவன்.

**மந்திரம் ஒரெழுத்து உரைத்த மாதவர்**
**சிந்தையில் நொந்திட தீமைகள் செய்தவர்**
**நுந்திய சுணங்களாய் பிறந்து நூறு உரு**
**வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. (516)**

குரு நிந்தை தலைப்பின் கீழ் வரும் மந்திரங்கள் கடுமை யான சாபங்களாகவே உள்ளன. போன ஜன்மத்தில் யாரோ ஒரு பக்தரின் சாபத்தில்தான் இந்தப் பிறவி எடுத்துள்ளோம். இனி இந்த ஜன்மத்திலாவது விழிப்புடன் இருக்கவேண்டாமா?

எல்லாம் ஒன்று என்று உணர்ந்தவர் மாதவர். தவ சிரேஷ்டர்கள். அவர்கள் சிந்தையை நொந்திடச் செய்தவர் நாயாக பிறப்பதுடன் புலையர் என்றால் மாமிசத்தில் உற்பத்தியாகும் புழுக்கள் போன்றவர்கள். நம் பிண்டத்திலும் கோடிக்கணக்கான கிருமிகள் குடியிருக்கின்றன. நம் மலம், மூத்திரம், ரத்தம், சுக்கில ஆராய்ச்சி யிலேயே இதை நாம் பார்க்கலாம்.

**ஈசனடியார் இதயம் கலங்கிடத்**
**தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்**
**வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்**
**நாசமதாகுமே நந் நந்தி ஆணையே. (517)**

ஈசன் என்பது இறைவன் இச்சைக்கு இசைந்து நடப்பவன் அவன் அடியார் அவனுக்கேற்ப அவன் பிரதிபலிப்பால்தான் இருப்பார்கள். அவர்கள் உள்ளம் கலங்கும்படி செய்யும் தீயோர் ஒருவர் உளராயினும் அத்தேசம் பாழாகும். நாடும் பாழாகும். பல நாடுகள் கொண்டது நகரம். பல நகரங்கள் கொண்டது தேசம். பல தேசங்கள் கொண்டது கண்டம். அதுவே நம்மிடம் களம் என்ற அண்டம் பல கண்டங்கள் கொண்டது உலகம். பல உலகம் கொண்டது புவனம். இந்திரன் நிலையும் கெடும். பெருமன்னர் நிலையும் கெடும்.

**சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்**
**நன்மார்க்கமும் குன்றி ஞானமும் தங்காது**
**தொன் மார்க்க மாய துறையும் மறந்திட்டு**
**பன்மார்க்கமும் கெட்டுப் பஞ்சமு மாமே. (518)**

செந்நெறிச் சிவகுருவிடமிருந்து பொய் வருமானால் நன்னெறியும் கெடும். உணர்வும் தங்காது. பழமை தொட்டு வருகின்ற செந்தமிழ் துறையாகிய ஆகமமும் மறைந்தொழியும், செந்தமிழ் நெறியாகிய வேதமும் கெடும். பஞ்சமும் உண்டாம். இந்த சாபம் திருமூலர் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சபித்தது. அது இன்று நிறைவேறுவதை கண்முன்னால் பார்க்கிறோம். திருமந்திரம் என்று ஒரு நூல் தமிழில் உண்டு என்று எத்தனை தமிழனுக்குத் தெரியும்?

**கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு**
**மெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விழிபோன்றும்**
**கைபட்ட நெய்பால் தயிர் நிற்கத் தானறக்**
**கைப்பிட்டுண்பான் போன்றும் கன்மி**
**ஞானிக் கொப்பே. (519)**

தன் கையகத்து அருமையாகக் கொடுக்கப்பட்ட விலை வரம்பில்லாப் பெருமணி ஒன்றை அறியாமையால் புறக்கணித்துப் போகவிட்டு எல்லாரும் உண்மையாகவே விலை மதிப்பில்லா பயனில்லாக்கல் என்று இகழவும் நாணமின்றி அக்கல்லை சுமப்பவன் போல் விதி போன்றும் கையில் கிடைத்த நெய், பால், தயிர் இவற்றை உண்ணாது, கடுமையான கசப்பை உண்ணும் அவன் தலை எழுத்தை என்னவென்று சொல்வது. காமியத்தில் ஈடுபட்டவன் கசப்பு மருந்தையும் பிட்டு மண்ணும் சாப்பிட்டவனுக்கு ஒப்பு. ஞானி மாமணியை சுமப்பவர் ஒப்பர். அமிழ்தம் சாப்பிட்டவருக்கு ஒப்பர். வாழ்க்கையில் எது வேண்டும் என்பதை நாம்தான் முடிவு செய்யவேண்டும்.

## 23. மகேசுரர் நிந்தை

**ஆண்டான் அடியவர் யார்க்கும் விரோதிகள்**
**ஆண்டான் அடியவர் ஐயம் ஏற்று உண்பவர்**
**ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்**
**தாம் தாம் விழுவது தாழ் நரகாகுமே. (520)**

அருளோன் என்பது சதாசிவ தத்துவர். விண்ஞானம் உள்ளவர். அருவத்தில் வாழ்பவர் ஆண்டான் என்பது அடக்கி ஆள்பவன். எப்பொழுது பிறரை அடிமை என்றும் தான் ஆட்சியாளன் என்ற நினைப்பு வந்ததோ அவன் பொது மக்களுக்கு விரோதி தானே. சிவனடியார்கள், நான் எனது என்ற மலப்பிணிப்புடைய மற்றையோருக்கு பெரும் பகைவரே. அரசியல் என்பது என்ன? மக்களின் வரிப்பணத்தில் வாழ்வது. அது அதிகாரப் பிச்சை. அவ்வளவே. மக்களிடம் வாங்கிய பிச்சையை வைத்துக்கொண்டு அவர்களையே ஆட்டிப் படைக்கிறார்கள். பொதுவாக அரசியலில் வேலை செய்பவர்கள் (Public Servants) பொது மக்களுக்கு சேவை செய்பவர். அவர்களுக்கு பொதுமக்கள் எஜமானர். அவர்கள் பணத்தில் சாப்பிடுபவர். அவர்கள் மக்களை மதித்து நடக்கவேண்டும் என்பதுதான் முறை. ஆனால் நடைமுறையில் மக்கள்தாம் அவர்களுக்கு பயப்படுகிறார்கள். என்ன தலைகீழ்ப் பாடம் பாருங்கள்.

**ஞானியை நிந்திப்பவனும் நலன் என்றே**
**ஞானியை வந்திப்பவன் செய் நல்வினை**
**ஆன கொடுவினை தீர்வான் அவன் வயம்**
**போன பொழுதே புகும் சிவ போகமே. (521)**

திருவடி உணர்வு பெற்ற சிவஞானியாகிய சிவனடியார்களை அறிந்தோ, அறியாமலோ நிந்திப்பதாகிய வசை கூறியவர்

நல்வினைப் பகுதியினின்று நீங்கி துன்புறுவர். வந்தித்தல் ஆகிய அவர்களுக்கு இசைந்து கொடுப்பவர் தீவினைப் பகுதியினின்று நீங்கி இன்புறுவர். நம்மை சிவனடியார் (அன்பே உருவானவர்) இடம் முற்றாக ஒப்புவித்து நின்ற அப்பொழுதே (ஒப்புவித்தல் என்றால் - சொல்படி கேட்டல்) திருவடி உணர்வே எய்துவர்.

ஆகவே மகேசுவரர் என்பது காற்றை கடவுளாகக் கருதுவது. ஆகாயத்தை அடுத்து முக்கியமானது காற்று. மனிதர்களாகிய நாம் காற்றின் ஆட்சியில்தான் இருக்கின்றோம். மண், நீரைவிட்டு நீங்கிவிட்டோம. ஆனால் பழைய வாசனை விடமாட்டேன் என்கிறது.

## 24. பொறை உடைமை

**பற்றி நின்றார் நெஞ்சில் பல்லிதான் ஒன்று உண்டு**
**முற்றிக் கிடந்தது மூக்கையும் நாவையுந்**
**தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்**
**வற்றாது ஒழிவது மாமை யாமே. (522)**

ஓட வல்லார் - மூர்த்தி (மூன்று வகை சுவாச கதி. பூரகம், ரேசகம், கும்பகம் - அதாவது நீர்த்துளியுடன் உள்புகும் காற்று, ரேசகம் என்பது வெளிவிடும் காற்று. நெருப்புடன் இருப்பது கும்பகம் - உள் நின்று தங்கும் காற்று) ஓடும் காற்றை நிற்க வைக்கும் இடம் ஸ்தலம். அந்த இடம் நம் கண்களே, 3-வது தீர்த்தம். தீயினால் நீரைச் சூடாக்கினால் ஆவியாகும். ஆவிமேல் நீரைத் தெளித்தால் அது அடங்கிவிடும். இம்மூன்று செயல்களும் ஒழுங்காக செயல்பட்டால் - சத்குரு (அறிவு) தானாக வாய்க்கும். பல்லி என்பது பலவித ஒலிகள். ஆனால் ஒரே ஒலியின் பல எதிரொலிகள். அந்த ஓர் ஒலியே 'ஓம்' என்பது. அந்த ஒரு ஒலியை பற்ற வல்லார் பல ஒலிகளை கேட்கமாட்டார். பல ஒன்றாவதே கருத்து.

**ஞானம் விளைந்தவர் நம்மிடம் மன்னவர்**
**சேனை வளைந்து திசைதொறும் கைதொழ**
**ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை**
**ஏனை வளம்தருள் எட்டாலு மாமே. (523)**

தெளிவு நிலையில் உள்ளவர்கள் எல்லோரும் வணங்கத் தக்கவர்கள் ஏனெனில் நாமும் அவர்போல் ஆக அவர்கள் சுவடைப் பின் பற்றினால் நாமும் தெளிவு பெறுவது சுலபம்.

**வல் வகையாலும் மனையிலும் மன்றிலும்**
**பல் வகையாலு:ம பயிற்றிப் பதம் செய்யும்**
**கொல்லையினின்று குதி கொள்ளும் கூத்தனுக்கு**
**எல்லை இல்லாத இலயம் உண்டாமே. (524)**

சிறந்த முறையில் வீட்டிலும் நாட்டிலும் பொறுமையைக் கைக்கொண்டால் அப்பயிற்சி நல்ல செம்பொருளைக் காட்டும். ஏன் அதுவாகவே ஆக்கும். உலகியலைப் பார்த்தால் நமக்கு கோபம் தான் வரும். எப்படி பொறுமையாயிருப்பது என்ற கேள்வி எழும். ஆனால் காண்பது எல்லாம் பொய் என்று நிரூபணம் ஆகிவிட்டால் சிரிப்புதான் வரும். எல்லாம் கானல் நீர். கானல் நீரைப் பிரிய மனமில்லாமல் தடுமாறுவதுதான் நம் தவறு. மன்று - நாடு. கொல்லை - பேரொடுக்க பெரு வெளி. இலயம் - ஒடுக்கம்.

## 25. பெரியாரைத் துணைக் கோடல்

**ஓட வல்லார் தமரொடு நடாவுவன்**
**பாட வல்லார் ஒலி பார்மிசை வாழ்குவன்**
**தேட வல்லார்க்கு அருள் தேவர் பிரானொடும்**
**கூட வல்லாரடி கூடுவன் யானே! (525)**

(இதன் பொருள் 22-ம் பாட்டில் சொல்லப்பட்டுவிட்டது)

சான்றோர் நூல்களை உருவத்தில் பொருள் பண்ணக்கூடாது. பெரியாரை என்று சொல்லும் போது உருவத்தில் பெரியவர்கள் அல்ல. வயதில் பெரியவர்கள் அல்ல. பின் யார் பெரியார்? தனக்காக (உடலுக்காக) வாழாமல் அதை பிறருக்காக அர்பணித்தவரே பெரியவர். விதி, மதி, நிதி, பதி என்று ஜீவாத்மா வாழ்க்கையில் நான்கு நிலைகள் உண்டு. இதில் விதி, மதி, நிதி, மூன்றும் காலத்துக்கு உட்பட்டது. அவை நிலை பெறாதவை. ஆனால் பதி என்பது என்றும் நிலைபெற்றது. பரந்த தீ - ஒளி அது அருட்பெரும் ஜோதி. உருவமில்லாத அருவம். அருள் அவன் அருளாலே அவன்தாள் வணங்குவோம். இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க. பொருள் (உருவம்) இலார்க்கு இவ்வுலகம் இல்லை. அருள் இலார்க்கு அவ்வுலகம் இல்லை. அருளை விரும்பினால் உருவங்களை நம்பி ஏமாற வேண்டாம்.

**தாம் இடம்பட்டு தளிர்போல் தயங்கினும்**
**மாமனத்தங்கு அன்பு வைத்த திலையாகும்**
**நீ இடர்ப் பட்டிருந்து என்செய்வாய் நெஞ்சமே**
**போமிடத் தென்னொடும் போது கண்டாயே. (526)**

பெரியோர் மிகத் துன்புற்று வாடினும் அத்துன்பத்தின்கண் தங்கள் மனதினைச் செலுத்தார். நெஞ்சம் வருந்தி என்ன பயன்? நாம் உலகைவிட்டுப் போகும்போது நம்முடன் வருவது போகப் பொருள்கள் அல்ல. எவை எவை அறிவாக மாற்றப்பட்டதோ அவைதான் வரும். அறிவு என்பது அருவம்.

அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிலர் தத்துவத்தை
நெறிதான் மிக மிக நின்று அருள் செய்யும்
பெரியாருடன் கூடில் பேரின்ப மாமே. (527)

சிலர் தேவர்க்கும், மூவர்க்கும் யாவர்க்கும் மேலாம் சிவபெருமானை திருவருளால் உள்ளத்தே நாடி அறிவர். அவன் திருவடி ஒடுக்கத்தால் மெய் உணர்வு கைவரப்பெறுவர். தத்துவம் - மெய் - படிப்படியாக உயர்த்தும். அப்படி பெரியாருடன் கூடி வாழ்வதே பேரின்பமாமே.

தார் சடையான் தன் தமராய் உலகினில்
பேர் புகழாம் எந்தை பொன்னடி சேருவர்
வாயடையா உள்ளத் தேர்வார்க்கு அருள் செய்யும்
கோ அடைந்து அந்நெறி கூடலு மாமே. (528)

சிவபெருமானுக்கு உரியவராய் மதப்போரை விரும்பாமல் வாய்வாளாது உள்ளத்தே நினைவோர் பெரியர். அவர்க்கு அருள் செய்யு முதல்வன் சிவன். பெரியோர் பெரியோர் என்றால் அதற்கு ஒரு விளக்கம் வேண்டும். அப்படியானால்தான் பாட்டின் பொருள் புரியும். மௌனமே பெரியோர். ஒலிக்கும் அப்பாற் பட்டது. 'கோ' என்பது நாதத்தையே குறிக்கும். ஒலிக்கு மூலப்பொருள் காற்று, நெருப்பு, நீர் சேர்ந்த அனுக்கூட்டக் குறிப்பிட்ட குழல் வலி செல்வதே நாதம். குழல் போன்ற அமைப்பு இல்லையாயின் நாதம் கிடையாது. அதை வெட்ட வெளி என்பர்.

உடையான் அடியார் அடியாருடன் போய்ப்
படையார் அழல் மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்று அவர் கண்டறிவிப்ப
உடையான் வருகென ஓல மென்றாரே. (529)

எல்லாம் உடையவன் சிவபெருமான். அருட்பெரும்சோதி. அடியார்கள் அவனுக்கு அடுத்து நிற்பவர் அவர்களுடன் போய் முத்தலை (சாகாக்கால், வேகாத்தலை, போகாப்புனல்) வேல்படை நிறைந்தவர். கழல் போன்ற செம்மேனியன் ஆகிய சிவன் இருக்கும் வெள்ளிமலை சென்றேன். அங்கே காவல் நிற்கும் நந்தி தேவரிடம் அறிவிக்க அவன் அருள்தர உட்புக்கு, அவர்கள் 'ஓம்' என்று ஓலமிட்டனர். ஓலம் - அடைக்கலமொழி.

அருமை வல்லான் கலை ஞானத்துள் தோன்றும்
பெருமை வல்லோன் பிறவிச் சுழி நீந்தும்
உரிமை வல்லோன் உணர்ந்து ஊழி இருக்கும்
திருமை வல்லாரோடு சேர்ந்தனன் யானே. (530)

கலைஞானம் - திருமுறை உணர்வு. திருமை - திருவருள் தன்மைக்கு மாற்றும் மனம். தன்னையும் - தலைவனையும். மாற்ற மனம் கழிய நின்ற மறையோன் அருமை, வல்லோன். அவன் கலை ஞானத்தில் தோன்றி அருள்வன். கலை என்பது நாலு, பதினாறு, அறுபத்திநாலாகும். அவனை தினையளவும் மறந்து அறியேன் என்ற திண்ணிய நெஞ்சினராய் உள்ளவர் பிறவிச் சுழலில் சிக்காமல் நீந்துவார். அருவமாக நீடூழி வாழ்வர். மலர்மிசை ஏகினானை மானடி சேர்ந்தார் நிலமிசை நீடூழி வாழ்வர். இத்தகைய வல்லார் சிவத்தன்மையுடையார். உணர்வரிய மெய்ஞானம் நுண்ணுணர்வாகிய திருவடியுணர்வாகும் - இதுவே உணர்வில் நேர்பெற வரும் சிவயோகம்.

## பின்னுரை

பரப்பிரம்மத்திலிருந்து வெளிப்பட்ட ஒரு பொறியே ஜீவன். பரப்பிரம்மம் நித்ய, சுத்த, புத்த, முக்த பரிபூரண ஸ்வரூபி. நித்யம் - என்றும் இருப்பது, சுத்தம் - நிர்மலமாயிருப்பது, முக்தம் - எதற்கும் கட்டுப்படாமலிருப்பது, பரிபூரணம் - எங்கும் நிறைந்திருப்பது.

பரப்பிரம்மத்திலிருந்த ஜீவாத்மாக்களுக்கு இத்தகைய குணம் இருக்க வேண்டாமா? இருக்கிறது. ஆனால் அறியாமை ஒரு திரைபோல் மறைத்திருக்கிறது. யான், எனது என்பதே அறியாமை. இந்தத் திரை நீங்கினால் ஜீவப்பிரம்ம ஐக்கியந்தான்.

அகம்பாவத்தால் தான் செய்த கர்மங்களை அனுபவிக்க மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கிறது. பரமாத்மாவுடன் இணைய ஸ்தூல, சூட்சும, காரண சரீரங்களை ஒழிக்க வழிதேட வேண்டும். அதற்குரிய சன்மார்க்கத்தைக் காட்டுவதே திருமூலர் திருமந்திரம்.

சூட்சும சரீரத்தில் மிக முக்கியமானது மனம். இது நம் கற்பனையால் உண்டாக்கப்பட்டது. மனம் அழிந்தால், இந்திரியங்களும், பிராணனும் தானே அழிந்துவிடும். எண்ணங்கள் இருக்கும்வரை கர்மங்கள் தொடர்ந்து கொண்டே வரும். அறியாமையால்தான் கர்மங்கள் வளர்கின்றன. நான், எனது என்று கருதுவதே அறியாமை. நம்மை யார் என்று ஆராய்ந்தாலே இது புரியும்.

ஜீவனிடமுள்ள ஜீவத்தன்மை விளங்கியதும் அது தனி ஆத்மாவாகி பரமாத்மாவுடன் லயமாகிவிடும். அப்படி லயித்தால் பேரின்பமாகும்.

இதற்கு மனதை ஒருநிலைப்படுத்த வேண்டும். இடைவிடா தியானப் பயிற்சியால் மனதில் சலனம் நின்றுவிடும். மனதில் ஆட்டம் நின்றுவிட்டால் (இமை ஆட்டம்) அஞ்ஞானம் மறையும்.

ஐம்பூத அணுக்களால் ஆனதே இந்த உடல். இதில் ஞானேந்திரியங்கள் (அறிவின பகுதிகள்) கர்மேந்திரியங்கள், பிராணன்கள், மனம், புத்தி இந்த 17-ம் சேர்ந்து சூட்சும சரீரம். இதை லிங்க சக்கரம் என்பர். அறியாமை என்னும் அழுக்கால் ஆனதே காரண சரீரம். இதை எளிதில் அகற்ற முடியாது. பிறவிதோறும் அழிவது ஸ்தூல சரீரமே. ஜீவாத்மா ஸ்தூல சரீரத்திலிருந்து பிரிந்து செல்வதே மரணம். வேறொரு சரீரத்தைப் பற்றிக் கொள்ளும்போது சூட்சும காரணச் சரீரங்களும் விடாமல் தொடர்ந்து ஒட்டிக் கொள்கின்றன. இதற்கான மார்க்கமே சரியை, கிரியை, யோகம், ஞானம்.

முன் இரண்டும் புறச்செயல். பின்கூறிய இரண்டும் ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட அகச்செயல். ஆகவே, காரண காரிய தெரிந்து புறச் செயல், அகச் செயல் அறிந்து செயல்பட்டால் பேரின்பம், பேராற்றல் அடைவது நிச்சயம்.

முற்றும்





## இந்நூல் வெளிவர உதவிய அன்பர்கள்

| | | தொகை |
|---|---|---|
| 1. | திரு. ரவிச்சந்திரன் (BHEL) மூலம் | 2,000 00 |
| 2. | திரு. பாஸ்கரன் - அனுராதா | 2,000 00 |
| 3. | திரு. உய்யகொண்டான், காத்தபெருமாள் | 1,000 00 |
| 4. | திரு. பெரியகருப்பன், ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 1,000 00 |
| 5. | திரு. V.S.வேலாயுதம், ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 1,000 00 |
| 6. | திரு. A.V.K. சொக்கலிங்கம், DD-5 | 630 00 |
| 7. | திரு. P.S. திருவேங்கடம், சென்னை - 34 | 500 00 |
| 8. | திருமதி. மல்லிகா, ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 500 00 |
| 9. | திரு. K. சீனிவாசன் | 200 00 |
| 10. | ஆண்டவர் ஜவ்வாது கம்பெனி | 200 00 |
| 11. | திரு. S. பரமசிவம், T.V.Trading Co, மதுரை | 200 00 |
| 12. | திரு. காத்தவராயன், மணலூர்பேட்டை | 200 00 |
| 13. | சௌ. பானுமதி. ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 200 00 |
| 14. | சௌ. லலிதா, ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 200 00 |
| 15. | திரு. C. ராமசுப்பிரமணியம் (BHEL) திருச்சி | 200 00 |
| 16. | திரு. கல்யாணராமன், ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 101 00 |
| 17. | திரு. வெங்கட்ராமன், ஸ்டேட் பேங்க், திருச்சி - 1 | 100 00 |
| 18. | திரு. நாராயணமூர்த்தி (BHEL) | 100 00 |
| 19. | திரு. ஞானசம்பந்தம், அண்ணாநகர், மதுரை | 100 00 |
| 20. | திரு. N. சொக்கலிங்கம், அண்ணாநகர், திருச்சி | 100 00 |
| 21. | திரு. சோமசுந்தரம், உடுமலைப்பேட்டை | 100 00 |
| 22. | திரு. சக்கரமூர்த்தி, PN.BK வேலூர் | 100 00 |
| 23. | திரு. B. சந்திரசேகரன் (BHEL) | 100 00 |
| 24. | திரு. E. திருமாவளவன் (BHEL) | 100 00 |
| 25. | திரு. P.N. வேலுச்சாமி (BHEL) | 100 00 |
| 26. | திரு. A. ஸ்டீபன் சேவியர் (BHEL) | 100 00 |
| 27. | திரு. V. சுதர்சனம் (BHEL) | 100 00 |
| 28. | திரு. V. தசரதன் | 100 00 |
| 29. | திரு. S. தர்மராஜ் (BHEL) | 50 00 |
| 30. | திரு. V.M. செல்வராஜ் (BHEL) | 50 00 |
| 31. | திரு. பாலசுந்தரம் | 50 00 |
| 32. | திருமதி. சுசிலா ராஜசேகரன் H.V.NIT | 36 00 |
| 33. | திரு. P.K. சண்முகபிள்ளை, ராணிப்பேட்டை | 25 00 |

## ஆசிரியரின் பிற மெய்யுரை விளக்க நூல்கள்

1. விநாயகர் அகவல்
2. கந்தர் கலிவெண்பா
3. திருமூலர் திருமந்திரம் - முதல் தந்திரம்
4. மறைபொருள் விளக்கம்
5. அறியாமை நீக்கம்
6. அய்யப்ப சுவாமி மணிமாலை
7. அவ்வைக்குறள்
8. மனிதனும் தெய்வமாகலாம்
9. சிவபுராணம் (அச்சில்)
10. திருக்குறள் (அச்சில்)
11. திருமந்திரம் - 3 முதல் 9 முடிய (அச்சில்)
12. ஞானப்பொறிகள் (அச்சில்)

கிடைக்குமிடம் :

**வீர. உலகநாதன்**
4, வீட்டு வசதி வாரியம்,
சாலை ரோடு,
திருச்சி - 620 003.

விலை : ரூ. **25.00**